உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




தொகுதி 10 | குரோதன ௵ வைகாசி மீ ௧௳ | பகுதி 11
1925 ௵ மேமீ 14௳


## கடவுள் வணக்கம்.

எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே
யெல்லாமு னுடைய செயலே
யெங்கணும் வியாபிநீ யென்றுசொலு மியல்பென்
றிருக்காதி வேத மெல்லாம்
சொல்லான் முழக்கியது மிக்கவுப காரமாச்
சொல்லிறந் தவரும்விண்டு
சொன்னவையு மிவைநல்ல குருவான பேருந்
தொகுத்தநெறி தானு மிவையே
அல்லாம லில்லையென நன்றா வறிந்தே
னறிந்தபடி நின்று சுகநான்
ஆகாத வண்ணமே யிவ்வண்ண மாயினே
னதுவுநின தருளென்னவே
கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்தினை
கதிக்குவகை யேது புகலாய்
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாக ரக்கட வுளே. (1)

ஆவி யேயுனை யானறி வாய்நின்று
சேவி யேன்களச் சிந்தை திறைகொடேன்
பாவி யேனுள பான்மையைக் கண்டுநீ
கூவி யாளெனை யாட்கொண்ட கோலமே. (2)

கோல மின்றிக் குணமின்றி நின்னருட்
சீல மின்றிச் சிறியன் பிழைப்பனோ
ஆல முண்டு மமிர்தரு வாய்வந்த
கால மெந்தை கதிநிலை காண்பதே. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. "அவனன்றி யோரணுவு மசையாது" என்கிறபடி எங்கும் வியாபித்து எல்லாவற்றையும் ஆட்டுவிக்கின்ற பரமான்மாவே அனைத்திற்குங் காரணமென்றும், இவ்வுண்மையை யுள்ளபடி யறிந்த ஜீவான்மா சுகதுக்காதிகளில் விருப்பும் வெறுப்புங் கொள்ளாது, சமநோக்குடன் பரமான்மாவின் திருவருளையே தஞ்சமென நாடி நிற்கும் என்றும் இந்தப் பாடலால் நாம் அறிகின்றோம்.

'எல்லாமுனடிமையே' என்பது பிரமன் முதல் பிபீலிகை பரியந்தமுள்ள ஆன்ம வர்க்கங்கள் நிறைந்த சகமுழுதும் இறைவனுக்கு அடிமை என்பதை யுணர்த்தா நின்றது.

"சகமலா தடிமை யில்லைத் தானலாற் றுணையு மில்லை
நகமெலாந் தேயக் கையால் நாண்மலர் தொழுது தூவி
முகமெலாங் கண்ணீர் மல்க முன்பணிந் தேத்துந் தொண்டர்
அகமலாற் கோயி லில்லை யையனை யாற னூர்க்கே"

என்று தேவாரங் கூறுகின்றது.

உடைமை=சொத்து.

'எல்லா முனுடைய செயல்' என்பதனை,

"ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே
அடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே
யுருகுவித்தா லாரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரே
பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே"

என வரும் தேவாரத்தாலறிக.

வியாபி=எங்கும் நிறைந்தது.

இயல்பு=சுபாவம்.

இருக்காதி வேதம்=இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்.

சொல்லிறந்தவர்=மௌன நிலையினர்.

விண்டு=வாய்விட்டு.

சுகம் நான் ஆகாத வண்ணம்=நான் இன்புற்றிராமல்.

கதி=மோக்ஷம்.

வகை=வழி.

சிற்சபை=சிற்றம்பலம்

பசுபாசங்கள் சுதந்தர முடையனவன்று. பசு (ஆன்மா) சேதனத் தன்மையோடு கூடியிருந்தும் அறிவித்தாலல்லது எதையுந் தானே யறிய முடியாது. பாசம் சடமாகையால் அசைவித்தாலல்லது அசையாது.

ஆன்மா தனுகரணங்களைத் தானேயாக்கிக்கொள்ளவும், பாசம் தனுகரண மாக மாறித் தானே ஆன்மாவை யடையவுமட்டா. இறைவன் தூண்டுதல் வேண்டும். ஆகவே இப் பசுபாசங்களை அறிவித்தலையும் அசைவித்தலையும் நோக்கி 'எல்லாமுனுடைய செயலே' என்னப்பட்டது. "சிவன் செய லாலே யாதும் வருமெனத்தேறேன்" என்று மற்றோரிடத்தில் இவ்வாசிரி யரே கூறுவதும் ஈண்டறியத்தக்கது.

இந்த உண்மையினை நன்குணர்ந்திருந்தும் அடியேன் அச் சுகாரம்ப நிலையிற் றலைகூடாது வீணே காலங்கழித்தேன்; அதனைத் தேவரீரது திரு வருள் கூட்டிவைத்தாலல்லது கூடுதலில்லை; மந்தனுகிய அடியேனுக்கு அம் மெய்ம்மையை விளக்கிக் காட்டினுய்; அப்படிச் செய்ததும் உனது அருளே. ஆகையால் தேவரீரை யன்றிப் பேரானந்த வீட்டை யளிப்பவர் எவர்? என்று விண்ணப்பித்துக்கொள்ளுகிறுர்.

2. ஆவி = உயிர்.
க(ள்)ளச்சிந்தை = வஞ்சமனம்.
திறை = பகுதி.
பான்மை = தன்மை.

3. கோலம் = சின்னம் (அடையாளம்.)
சீலம் = நல்லொழுக்கம்.
ஆலம் = விஷம்.
சுதிநிலை = சிவசுதியின் நிலைமை.

"குறிக ளும்மடை யாளமுங் கோயிலும்
நெறிக ளும்மவர் நின்றதோர் நேர்மையும்
அறிய வாயிரம் ஆரண மோதினும்
பொறியி லீர்மன மென்கொல் புகாததே"

என்னும் தேவாரம் இங்கறிதற் பாலது.

---

# ஆனந்தபோதினி

குரோதன௵ வைகாசி மீ கஉ

## சமாதானமே சுகவாழ்வு.

உலகத்தில் மானிடராய்த் தோன்றிய ஒவ்வொருவரும் அடையவேண்டிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புரு டார்த்தங்கள் நான்கையும் பெறுதற்கு முக்கிய ஏதுவாயிருப்பது

துன்பற்ற இல்வாழ்க்கையே யாம்; அதுவே சுகவாழ்வெனப் படும். அதனை எய்துதற்கே எவரும் முயற்சி செய்யவேண்டும். அவ்வாழ்வைத் தருதற்குப் பல ஏதுக்களிருப்பினும் அவற்றுள் ஒன்றே முதன்மை பெற்றதாகும். அஃதொன்று மாத்திரம் அமையுமானால்,மற்றவை அவசியமில்லாமலே, அது மிக்க சுகவாழ்வைக் கொடுத்துவிடும். அஃதியாதெனில் சமாதானமேயாம். அதாவது, மனிதர், ஒருவர்க்கொருவர் மாறுபடாமல், எக்காரியத்திலும் மனமொருமித்துப் பிரவேசித்தலாம். இந்த மனவொற்றுமையான சமாதான மென்னும் சிறந்த பொருளானது மனிதரிடத்துப் பொருந்துமேயானால் அவர்களுடைய வாழ்க்கையானது எப்பொழுதும் இன்பமயமாகவே நடைபெறும்; அரும் பெருங் காரியங்களிலும் அவர்கள் வெற்றிபெறுவார்கள்; அழியாப்புகழையும் செல்வத்தையும் அடைவார்கள்; ஆனந்தசாகரத்தில் மூழ்குவார்கள்; கவலையென்பதைக் கனவிலும் காணமாட்டார்கள்; மறுமையிலும் மாறா இன்பத்தை எய்துவார்கள். இச்சமாதானமானது எவ்வாறு சுகவாழ்வைத் தருகின்றதென்பதை நாம் ஆராய்ந்துபார்ப்போம்:—

இரண்டு சகோதரர்கள் மனவொற்றுமையுட னிருந்தால், தங்கள் பூர்வீக சொத்துக்களைப் பங்கிட்டுக் கொள்ளாமல் ஒரே குடும்பமாயிருந்து வாழ்வார்கள். அதனால் அவர்களுடையசெல்வமானது சிதைவுறாமல் நாடோறும் விருத்தியடைந்து வரும்; குடும்ப கௌரவமும் குறையாது; (இது பரம்பரையாக ஒற்றுமையும் கௌரவமும் உள்ளகுடும்பம்) எனப்பலராலும் அக்குடும்பம் நன்கு மதிக்கப்பெறும். அக்குடும்பத்தில் சுற்றச் சேர்க்கை மிகுதிப்பட்டே மகிழ்ச்சியும், புகழ்ச்சியும் அதிகரித்துவரும்; சுபகாரியங்களெல்லாம் இனிது நடைபெற்றுவரும்; அக்குடும்பத்திலிருந்து பலரும் பல உதவிகளைப் பெற்றின்புற்று வருவார்கள்; அக்குடும்பத்தார்க்கு எப்பொழுதும் விரோதிகள் ஏற்படமாட்டார்கள். இத்தனை நலங்களும், பிரிவினை யில்லாததன்மையால் உண்டாகின்றன. இனி, அச்சகோதரர்கள் பாகப்பிரிவினைசெய்து கொள்ள விரும்பினும், மனவிகற்ப மின்றிச் சொத்துக்களில் ஒருவர்க்கு அதிக மிருந்தாலும் குறைந்திருந்தாலும் சமாதானத்துடன் பங்கிட்டுக் கொள்வார்களேயானால், தங்கள் தங்களுக்குக் கிடைத்த பொருள்களை விருத்திசெய்து, பிரிவினை யில்லாதபோதுண்டான அவ்வளவு கௌரவத்தையும் சுகத்தையும் அடையா

விடினும, அவற்றில் பாதியேனும் அடைந்து திருப்தியுறலாம். இவர்களைப் போலவே கூட்டாக வியாபாரம் முதலிய தொழில் களைச் செய்வோரும், நிலபாத்தியா பாத்தியக்காரர்களும், கிராம வருமானங்களைப் பங்கிட்டுக் கொள்ளும் கிராமத் தொழிலாளிக ளும், பொதுவில் கிடைத்த ஊதியத்தைப் பிரித்துக் கொள்வோ ரும், உலகத்தில் தோன்றும் வெவ்வேறுவகைப் பாகப் பிரிவினை செய்து கொள்வோரும், பொருள்களைப் பிரிக்காமல் பொதுவில் வைத்துப் பயனை அனுபவிக்கவாவது, பிரித்துக்கொள்ள வேண்டி னல் அதிகம் குறைவு என்பதுபற்றி விரோதப்பட்டுக் கொள்ளா மல் சமாதானத்துடன் பிரித்துக் கொள்ளவாவது இசைவார்க ளானல், பொருள நஷ்டமுறாமலும், மனக்கவலை யடையாமலும், வறுமைக்குள் ளாகாமலும் நிறைந்த செல்வ முடையவர்களாய்ச் சிறந்த புகழுடன் மகிழ்ச்சி பெற்றுச் சுகவாழ் வடைவார்களென் பதில் எட்டுணையும் ஐயமின்று. இவர்களன்றி, ஒவ்வொரு குடும் பத்திலும் தோன்றும் தகப்பன்மார்களும், பிள்ளைகளும், சகோ தரர்களும், சுற்றத்தார்களும், மாமிமார்களும், மருமக்கள் மார்க ளும், அக்காள் தங்கையரும், ஓரகத்தியரும், நாத்திகளும், மாற் ருந்தாய்களும், மற்றையரும், ஒவ்வொரு காரியத்திலும் மன மாற்றமின்றி ஒன்றுபட் டிருப்பார்களாயின் அவர்கள் வாழ்க் கையில் உண்டாகும் இன்பத்திற்கு எல்லையுண்டோ? எப்பொழு தும் அவர்களின் வாழ்வு சுகமாகவே நடைபெறு மென்பதில் என்னதடை யிருக்கின்றது? குடும்பங்களி லின்றிப் பொதுவாக உலகத்திலுள்ள பொதுஜனங்களும், தாங்கள் பற்பல காரியங்க ளைச் செய்யுமாறு கூடுமிடங்களிலும், ரெயில்வேபயணம், கப்பல் பிரயாணம் முதலியவற்றைச் செய்யும்போதும், மேலும் பல் வேறு வகைப்பட்ட காரியங்களைச் செய்யத்தொடங்கும்போதும் சமாதானத்துடன் எண்ணிய கருமங்களை இயற்றுவார்களாயின் அவை இனிது பூர்த்தி பெறுவதோடு ஒவ்வொரு வகையிலும் அன்னார்க்கு நன்மையே அதிகரிக்கு மென்பதைச் சகலருமுணர் வர். இன்னும், ஆட்சி முறையார் இச் சமாதானத்தைக் கைக் கொள்வார்களாயின் அவர்களுக்குண்டாகும் அனுகூலங்கள் அள விறந்தன வென்பது நாம் உரைக்காமலே எவர்க்கும் விளங்கும்.

இனி, இச்சமாதான மின்மையா லுண்டாம் தீமைகளைப் பற்றியும் ஆராய்வாம்:—ஒற்றுமை யில்லாவிடின் ஒரு சிறுகாரி

யத்திலும் வெற்றிபெறல் முடியாது. கோபமும், பொறாமையும், வீண்பிடிவாதமும், பொய்யும், கொலையும், களவும், சூதும், வம்பும், வழக்கும், போரும், பொருளழிவும், பிறதீக்குணங்களும் ஒற்றுமை யின்மையிலிருந்து உற்பத்தியாகிவிடும். அவற்றால் மனமகிழ்ச்சி அடியோடு தொலைந்துவிடும்; வறுமைவந்து குடிபுகும்; சுகவாழ்க்கை சொல்லாமலோடிவிடும்; மனக்கலக்கமும், தேகத்தளர்ச்சியும் தினேதினே விருத்தியடையும். முடிவாகச் சொல்லுமிடத்து ஒற்றுமையற்றவர் உயிரற்றவரேயாவர். அவர்கள் உலகிலிருப்பதால் அடையும் பயன் ஒன்றுமின்றும். அவர்களுடைய வாழ்க்கையானது துன்பத்துடன் கூடிய வாழ்க்கையாகவே நடைபெற்றுக் கொண்டிருக்கும். எங்ஙனமெனில் :—

ஓர் ஊரில் இரண்டு சகோதரர்களோ, வேறுவகையான பாகஸ்தர்களோ ஒற்றுமை யற்றவர்களா யிருந்தால், தங்களுடைய குடும்ப சொத்துக்களேயோ, ஊதியப் பொருள்களேயோ, வருமானங்களேயோ, வேறுவகை பூஸ்திதிகளேயோ விரைவில் பிரித்துக்கொள்ள முற்படுகின்றனர். இந்த எண்ணமானது, அவ்விருவருள் ஒருவர் அதிகப்பயனே அடைகின்றார், மற்றொருவர் குறைந்தபயனே எய்துகின்றார் என்ற அபிப்பிராயத்தினாலேயே ஏற்படுகின்றது. அதனால் அந்தப்பாகப் பிரிவினே நேருங்காலத்தில், இருவருமே அதிகப்பங்கடைய வேண்டுமென்றும், ஒருவரையொருவர் வஞ்சிக்க வேண்டுமென்றும் கருதிச் சில சூழ்ச்சிகளேச்செய்ய ஆரம்பிக்கின்றார்கள். அதனால், இவர்களுடைய பாகப்பிரிவினே ஒழுங்கான முடிவிற்கு வருவதில்லே. தொடக்கத்திலேயே வாக்குவாதங்களும், சண்டை சச்சரவுகளும், அடிதடிகளும், பெருங்கலகங்களும் நேர்ந்துவிடுகின்றன. அவர்கள் ஒருவாறு ஆரம்பத்தில் அடங்கியிருந்தாலும் ஊரில் வம்பிழுத்துவிட்டு வேடிக்கைபார்க்கும் தம்பிமார்கள் சும்மாவிருப்பதில்லே. அங்குமிங்கும் தட்டிக்கொடுத்து, அவர்களேக் குடுமிபிடித்து இழுத்துக்கொள்ளச் செய்து கோர்ட்டுக்குக் கிளப்பிவிட்டு விடுவார்கள். ஸிவில் வியாஜ்ஜியம் வேறு, கிரிமினல் கேஸ் வேறு அவர்களால் தொடங்கப்பட்டுவிடும். சமாதானத்துடனிருப்பவர்களே, மித்திரபேதத்தால் கோர்ட்டுக்கிழுத்துவிட்டு, நாட்டுப்புறத்தார்களேவிட்டு நியாயஸ்தலமிருக்கும் நகரங்களிற் புகுந்து, கக்ஷிக்காரர் பொருளேக் கவர்ந்து காப்பி ஹோட்டல் விருந்தினராகவும்,

போஜனசாலைப் பூமான்களாகவும் திரியும் தரகுக்கார தாஷ்டிக வான்கள் இரண்டு பக்கத்திலும் மிக்க அன்புடையவர்களைப் போல உதவிசெய்யக் கிளம்பிவிடுவார்கள். அந்தோ! இவர்கள் புகுந்ததும், அந்தக் கக்ஷிக்காரர்களுடைய பொருளுக்கு நாச காலம் கிட்டிவிடும். இவர்களுடைய துர்ப்போதனைவயப்பட்ட அவர்கள், நியாய வாதிகளுக்குக் கொடுப்பதிலும், கோர்ட்டு சம்பந்தமான வேறு பல செலவுகளுக்களிப்பதிலும், சாக்ஷிகளுக்கும் தரகுகாரர்களுக்கும் சாப்பாட்டுச் செலவு, வண்டிச்செலவு முதலியவைகளைச் செய்வதிலும், பின்னும் அவர்களைச் சந்தோஷப்படுத்துவதற்கு நாடகம் பயாஸ்கோப் முதலியவைகளுக்குக் காணிக்கை செலுத்துவதிலும் அளவிறந்த பணச்செலவு செய்வார்கள். அச்செலவு ஒருமுறையோ டொழிவதில்லை. வருஷக்கணக்காகக் கோர்ட்டு வாயிதாக்கள் பல ஏற்படுவதால் பன்முறை ஏராளமான பொருள்கள் செலவாகிவிடுகின்றன. இதற்குள், கக்ஷிக்காரர்களின் கைப்பொருள்களெல்லாம் செலவாகிவிடுகின்றன. அதனால், அவர்கள், மேலும் செலவிடுதற்கு மயங்குகிறார்கள். அத்தருணத்தில் தரகுகாரர்கள், "இவ்வளவு தூரம் வந்துவிட்டு இனிச் சிறிது பணச்செலவிற்காகப் பின் வாங்கக்கூடாது; விற்காதனை விற்றாவது ஒருகை பார்த்துவிடவேண்டும்" என்று அவர்களுக்கு ஊக்கமூட்டுகிறார்கள். அதைக்கேட்டு அவர்கள், தங்களிடமுள்ள பூஸ்திதிகளை விற்றோ, அடகுவைத்தோ, கடன் வாங்கியோ செலவு செய்கிறார்கள். முடிவில் இருவருள் ஒருவருக்கு அனுகூலமாகவும், மற்றொருவருக்குப் பிரதிகூலமாகவும் தீர்ப்பளிக்கப்படுகிறது. இந்தத் தீர்ப்பைப் பெறும்போது கக்ஷிக்காரர் இருவரும் உள்ள பொருள்களெல்லாம் போய் மிகுந்த கடனுக்குட்பட்டிருக்கிறார்கள். அனுகூலமடைந்தவன் கூட சிறிது பொருள் இலாபம் பெற்றிருப்பினும் தான் அடைந்த கடனுக்கு அஃது இம்மியளவும் பற்றாததாகி விடுகிறது. ஆகவே, இருவரும் கைப்பொருள் இழந்து கடன்காரரான நிலையில் ஒரு தன்மையராய் விடுகின்றனர். சிலர் இந்நிலையோடு நின்றுவிடுவர். வேறு சிலர் இதனோடும் விட்டுவிடாமல் மேல் கோர்ட்டுகளுக்கும் அப்பீல்செய்து, இரண்டு மூன்று கோர்ட்டுகள் வரையிலும் போய் மேலும் கடன் தொல்லைகள் அதிகரித்து, வழக்குகளெல்லாம் முடிந்து வீட்டிற்குத் திரும்பும்போது, அதுவரை நடந்துவந்த நடவடிக்கைகளின் ரிக்கார்டுகளுக்கு நகல்வாங்கி, ஒரு கட்டாகக்

கட்டிப் பெரிய காகிதக்கட்டைத் தலையில் வைத்துக்கொண்டு வீடு போய்ச் சேர்ந்து, 'வழக்குக்குப் போனதில் வந்த இலாபம் இந்தக்கடுதாசி மூட்டைதான்' என்று பத்திரமாகப் பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டு மறுநாளே ஜீவனத்திற்கு என்னவழி செய்யலாம் என்று வெளித்திண்ணையில் உட்கார்ந்து யோசிக்கத் தொடங்குகிறார்கள். ஆயுட்கால முழுவதும் துக்கத்திலேயே மூழ்கிக் கஷ்டப்படுகின்றார்கள். அந்தோ! இவர்கள், தங்கள் கூட்டாளியின் பாகத்தில் கொஞ்சம் அதிகமாகச் சேர்கிறதற்கு மனம் பொறாது இங்ஙனம் வம்பு வழக்குச் செய்து உள்ளதையும் இழந்து வறிஞராய்க் கஷ்டப்படுவதில் பயனென்ன? இப்படி எல்லாச் சொத்துக்களும் நாசமாவதைக் காட்டிலும் உடன் பங்காளிகளுக்குச் சிறிது பாகம் அதிகப்படுவதால் ஒன்றும் தோஷமில்லையே. இவ்விஷயத்தில் சமாதானத்தைக் கைக்கொள்ளாததாலன்றோ இத்தகைய துன்பங்கள் நேர்கின்றன. சிலர், "வழக்குக்குப் போவதால் எல்லோருமா இவ்வகைக் கஷ்டத்திற்குள்ளாகின்றனர்?" என்று கேட்கக்கூடும். அவர்கள் அபிப்பிராயப்படி சிலர் மாத்திரந்தான் மிகப் பரிதாபநிலைமை அடைவார்களென்பது உண்மையே. எனினும் பொதுவாக நோக்குமிடத்து அவ்வாறு சிலர் தரித்திர திசையை அடைந்து பெரும்பான்மையோர் தங்கள் பூஸ்திதியும் கௌரவமும் கொஞ்சம் குறையாதிருப்பினும், அவர்களுக்கும் கடன்தொல்லை அதிகமாக ஏற்படுவதால் முடிவில் அவர்களும் நிச்சயமாகக் கஷ்டத்திற்குள்ளாகியே தீருவர். ஆகவே சமாதானமின்றி வழக்குத் தொடுப்பவர்களில் சுகப்படுவோர் இல்லையென்றே உறுதியாகச் சொல்லலாம்.

இன்னும் இந்தப் பாகப் பிரிவினை விஷயமாக நடக்கும் விநோதங்கள் பலவுள: சிலர், இதுபற்றிக் கோர்ட்டுக்குப் போகாவிடினும் வீட்டிலேயே ஒருவர்மீதொருவர்க் குண்டாகும் விரோதத்தால், பங்கு ஒருவர்க்கு ஜாஸ்தியாகவும், மற்றொருவர்க்குக் குறைவாகவும் இருக்கக்கூடாதென்று பயனற்ற பிரிவினைகளைச் செய்து கொள்கிறார்கள். ஒரு சமயம் இருவர் பாகம் பிரித்துக் கொள்ளும்போது பொதுவிலிருந்த ஒரு பெரிய மிடாப்பானையை ஒருவர் மற்றொருவருக்குக் கொடுக்க இசையாமையால் இரண்டாக உடைத்துப் பங்கிட்டுக்கொண்டார்களாம். ஐயோ! இவர்கள் இந்த ஓடுகளைப் பாகஞ்செய்து கொண்டதால் அடைந்த பயனென்னையோ! இன்னும் சிலர் அகலக்குறைவான வீட்டை ஒரு

வர்பக்கத்தில் விட்டுவிட இஷ்டப்படாமல் முரட்டுப் பிடிவாதத்தால் இரண்டு கஜ அகலத்தில் பாகம் பிரித்துக்கொண்டு அதை உபயோகிக்கமுடியாமல் கஷ்டப்படுகின்றனர். பின்னும் சிலர் உயர்ந்த துணிகளைக்கூட இரண்டாகக்கிழித்து ஒருவருக்கும் உதவாமல் பங்குபோட்டுக் கொண்டதாகக் கேள்விப்பட்டிருக்கின்றோம். இவையெல்லாம் மூடத்தனமான பிடிவாதத்தாலும், சமாதான குணமின்மையாலும் ஏற்படுவனவேயாம். இவற்றால் இவர்களுக்குண்டாவது கஷ்டமேயன்றிச் சிறிதேனும் சுகமென்பதில்லை.

ஒரு குடும்பத்திலுள்ள தகப்பன், பிள்ளை, மனைவி, புருஷன், சகோதரர், மாமி, மருமகள், நாத்தி, ஓரகத்தி, சுற்றத்தார் முதலியவர்களும் சமாதானத்துடன் இராவிடின், தினந்தோறும் கலகங்கள் ஏற்பட்டு, குடும்பகாரியங்கள் கெட்டுச் சுபகாரியங்களும், குடும்பவிருத்திகளும் இனிது நடைபெறாமல் எப்பொழுதும் வம்புவழக்குகள் அதிகப்பட்டுக்கொண் டிருக்கும். அக்குடும்ப வாழ்க்கை சுகமாக நடைபெறாது.

வியாபாரம் முதலிய தொழில்களைச் செய்வோரும் பங்கு பிரித்துக்கொள்ளும் விஷயத்தில் சமாதானத்தைக் கைக்கொள்ளாவிடின், அவர்கள் அடையும் ஊதியபாகத்தின் பயன் கெடுவதோடு, அவர்களால் நடத்திவரப்பட்ட தொழில்களுக்கும் கெடுதி சம்பவிக்கும். அவர்கள் ஒருவரோடொருவர் போட்டிபோட்டுப்பிரிந்து, ஒருவர்செய்த தொழிலை மற்றொருவர் செய்து பொதுவில் எல்லாருடைய தொழில்களையும் கெடுத்துக்கொள்வார்கள். இவற்றாலெல்லாம் கிடைக்கும் பயன் துன்பமே.

கிராமத்தொழிலாளிகள் முதலியவர்கள், தங்கள் பாகப்பிரிவினை விஷயத்தில் மாறுபட்டுக் கொள்வார்களேயானால், அவர்களின் ஜீவனத்திற்கே கெடுதியாய் முடியும். அவர்களுக்குள் வழக்கு நேர்ந்ததைக்கண்டால் அவர்களுக்குச் சுதந்தரம் முதலிய கூலிகளைக் கொடுப்போரும் சரிவரக் கொடுக்கமாட்டார்கள். அதனால் அவர்கள் வறுமைக்குள்ளாகித் துன்புறுவார்கள்.

பொது ஜனங்களும் ஏதோ ஒரு பயன் குறித்துக் கூடிச் செய்யும் காரியங்களில் ஒற்றுமையை யிழந்து மனவிகற்பத்தை அடைவார்களாயின் அவை ஒருபோதும் நிறைவேறமாட்டா. அவர்கள் அவற்றால் அடையலாமென்று எதிர்பார்த்த நற்பயன்

களும் கைகூடா. அவர்கள் அடையத்தக்க பெரிய வெற்றிகளை யெல்லாம் இழந்துவிடுவார்கள்.

ரெயிலிலோ, கப்பலிலோ பிரயாணஞ்செய்பவர்களும், திருவிழா முதலிய சிறப்புக்களில் கூடுவோர்களும் ஒருவர்க்கொருவர் சிநேகபாவமாய் இடங்கொடுத்துக் கொள்ளாமலும், சௌகரியத்தை உண்டாக்கிக் கொள்ளாமலும்,கீறியும் பாம்பும் போலவும், எலியும் பூனையும் போலவும் சீறிக்கொள்வார்களேயானால் ஆங்காங்கே ஏற்படக்கூடிய சௌக்கியத்தையும் சந்தோஷத்தையும் இழந்துவிடுவார்கள்; மனக்களிப்பான வார்த்தைகளும் பேசுதற்கேதுவின்றி முகத்தைச் சுளித்துக்கொண்டு ஊமர்கள் போல் ஒருவரோடும் வார்த்தையாடாமல் செல்வார்கள்.

ஒரு ஆட்சிமுறையாளரும்கூடச் சமாதானத்தைக் கைக்கொள்ளாவிடின் பலவகைக் கஷ்டங்களுக்குள்ளாவர். அவர்க்குள் யுத்தங்கள் தலை யெடுத்தோங்கும்; எத்தனையோ உயிர்ச்சேதங்கள் நேரும். ஐசுவரியம் குறையும்; சந்தோஷத்திற் கிடமிராது. சமாதானத்தை உயர் பொருளாகக் கொள்ளாத முடிமன்னர் பலர் முற்காலத்திலும் பிற்காலத்திலும் இடர்க்குள்ளாகி இன்பமிழந்ததை நாம் கேள்விப்பட்டும் பார்த்து மிருக்கிறோம். இன்னும் இவ்வாறே உலகத்திலுள்ள பல வகுப்பாருள்ளும் ஒற்றுமையின்மையால் நேரும் துன்பங்களை நாம் அனுபவத்தில் அறிந்திருக்கிறோம். இவற்றை யெல்லாம் ஒவ்வொன்றாக நன்காராயுமிடத்துச் சமாதானமின்மையால் அவஸ்தையே அதிகரிக்குமென்பது ஐயமற விளங்கும். இந்த ஒற்றுமையற்ற தன்மையானது இங்ஙனம் பல்வகையிலும் துன்பத்தையே தருவதாயிருந்தாலும், நம் நாட்டவருள் பெரும்பான்மையோர் இதன் தீமையை உணர்ந்திருந்தாலும் இதனை நீக்கி ஒற்றுமையைக் கொள்ளாதவர்களாயிருந்து வருகின்றனர். இதனால் நம் நாட்டிற்கு நேரும் தீமைகளோ பலவுள. முக்கியமாக இது தேசக்ஷேமத்திற்கே குருத்துப்பூச்சி போன்றதாகும். முடிவாகக் கூறுமிடத்து இந்த ஒற்றுமைக் குறைவினாலேயே நம் நாட்டிற்கு க்ஷீண தசையுண்டாகிவருகிறதென்று சொல்லலாம்.

ஆதலின், நாம் ஒவ்வொருவரும் ஒற்றுமையின் உயர்வையும், சமாதானமின்மையின் தாழ்மையையும் நன்றாக ஆராய்ந்து ஆரம்பத்தில் கூறிய சுகவாழ்வை அடைதற்கான மனவோர்மையைக்

கொள்வோமாக. மாறாத சுகவாழ்வைப் பெறுவோமாக. ஜன சமூகத்துள் சமாதானக் கூட்டுறவொன்று மாத்திரம் ஏற்பட்டு விடுமாயின் அதனால் எவ்வகையிலும் ஆனந்தமான வாழ்க்கையே நடைபெறும். அவ்வாழ்க்கையினால் இருமைப் பயன்களையும் எய்தலாம். இப்பெரும்பயனை யடைதற்கு எல்லாருடைய இதயத் துள்ளும் நின்று இன்ப அமுதூட்டும் இறைவன் நமக்குள் கூட் டுறவை யுண்டாக்குமாறு அவன் பதமலர்களைப் பணிவோமாக.

ஓம் தத்ஸத்.

---

## ஆரம்ப ஆசிரியர்கள்.

இந்நாட்களில் எலிமெண்டரி பாடசாலைகளில் பயிலும் சிறுவர்கள் தக்கபடி விர்த்தியடைவதற்கேதுவான முறைகளை ஆசிரியர்கள் கையாட வேண்டுவதவசியம்.

குழந்தைகளின் மூளை விரைவாக வளர்ச்சியடையக் கூடிய தன்மை யுடையது. ஆதலால் அவர்களுக்குக் கடினமான வேலைகளைக் கொடுக்காமலும் ஒரு வேலையை நெடுநேரம் செய்யவிடாமலும் பிள்ளைகளின் அறிவுக்கு அதிக சிரமம் கொடுக்காமலும் இருக்கவேண்டும். சிறுவர்களுக்கு ஒரு வேலையை 20 நிமிடம் வரையில் செய்ய நியமிப்பது சாலச் சிறப்புடைத்து. குழந்தைப் பருவத்தில் அவயவங்கள் வளர்ச்சியுடையன வாதலால் குழந்தைகளைச் சலனமற்றுக் குந்தியிருக்கச் செய்வது அவர்களின் இயல்புக்கு விரோதமாகும். இதுபற்றியே குழந்தைகளை சுய இச்சையாய் விளையாடும் படியான மார்க்கத்தில் விட்டு ஆசிரியர்களும் ஒரு குழந்தையாகி அவர்கள் மனதை உற்சாகப்படுத்தி ஒவ்வொரு விஷயங்களையும் அவர்களிடமிருந்தே வரவழைக்கவேண்டும். குழந்தைகள் ஒவ்வொரு வேலையையும் தாமே செய்யும்படியான நிலைமையில் விட்டு அவர்களால் முடியாதபோது ஆசிரியர் உதவிசெய்தல் வேண்டும்.

தீதுநன் றறிகிலாச் சேயரென் செய்குவர்
கோதற வவரைநன் னெறியிற் கூட்டிடா
தேதங்க ளவர்முன்செய் திழிவைக் கற்பிக்குந்
தாதைதாய் புதல்வர்க்குச் சத்து ருக்களே. (நீதிநூல்)

குழந்தைகளுக்கு உற்றுநோக்கும் சத்தியிருப்பதினால் தாங்கள் பார்ப்பதிலெல்லாம் தங்களை யறியாமலே தாங்களும் அவ்வாறு நடப்பதற்குப் பிரயத்தனப்படுகிறார்கள். தொட்டிற்பழக்கம் சுடுகாடுமட்டும் என்பதுபோல இளமையில் ஏற்படும் பழக்க வழக்கங்கள் ஆயுள்வரையில் பாதிக்கின்றன. இதுபற்றியே வணக்கம், சாந்தம், காலம் தவறாமை, தயை, ஈசுவரபக்தி முதலிய நற்குணங்களை ஆசிரியர்கள் கடைப்பிடித்து, குழந்தைகள் முன்

நடத்தி, மேற்கூறிய நன்னடக்கைகளைத் தமிழ்நாடு முன்னேற்றமடையும் வண்ணம், தமிழ் பக்த சிகாமணிகளின் கதைகள் மூலமாக விளக்கிக்காட்டிப் பிள்ளைகளை இவ்வழியில் ஈடுபடுமாறு ஆசிரியர்கள் செய்யவேண்டும்.

எப்படி மூங்கில் குருத்தை நமது மனதின்படி வளைத்து வளர்த்தல் கூடுமோ அதுபோல சிறுவர்களின் மனோபலத்தை நம்வயப்படுத்த முடியும். ஆகவே இப்பருவகாலத்தில் கெட்ட எண்ணம், பொறாமை, அதிக ஆசை இவைகளைக் காட்டாமல் நீக்கி, நற்குணம், தெய்வபக்தி முதலியவைகளைப் போதிக்க முன்வரவேண்டும். குழந்தைகளுக்கு அதிக சமீபத்தில் இருக்கும் வஸ்துக்களைப் பார்க்கும் சக்தி கிடையாது. அவர்களுக்குத் தூரப் பார்வையே; ஆகையால் புத்தக மூலமாகக் கல்விப் பயிற்சி செய்தல் பிசகு. வெளிச்சத்தைப் பார்ப்பதனால் கண் கூச்சத்தை யடையும். ஆகவே வெளிச்சத்தைப் பார்த்துக்கொண்டு உட்காரவிடக்கூடாது. பாலர்களின் சிறு தசைகளுக்கு முன் பெருந் தசைகள் வளருந் தன்மையுடையனவாதலின் குழந்தைகளைக் கைநீட்டிச் செய்யும்படியான தொழில்களிலும் மணலில் விளையாட விடுவதிலும் பழக்குவதுடன் கட்டைகளை அடுக்கச்செய்வது மான வேலைகள் கொடுக்கவேண்டும்.

சில எலிமெண்டரி பாடசாலைகளில் தூங்கும் பிள்ளைகளை அதட்டிப் பயங்காட்டி ஓடச்செய்தோ நிற்கும்படி செய்தோ தூக்கத்தைத் தெளியும்படி செய்கிறார்கள். குழந்தைகள் நோயின்றி வளர்வதற்குத் தூக்கமே அவசியமாக ஏற்படுகிறது. ஆகையால் குழந்தைகளுக்கு அவசியமானபோது அவர்களைத் தூங்கவிடவேண்டும்.

குழந்தைகளுக்கு வாத்தியங்களின்பேரிலும் பாடல் கேட்பதிலும் பிராணிகளின்பேரிலும் பிரியம் அதிகம் உண்டு. இதனாலே ஆசிரியர்கள் பாடுவதிலும் வாத்தியம் வாசிப்பதிலும் தேர்ச்சிபெற்றவராயிருந்து கடவுள் பக்தி ஏற்படும்படியான பாடல்களைப் பாடி, அவ்வாறதற்கேற்றபடி வாத்தியங்களை வாசித்துக் காட்டிக் குழந்தைகளை உற்சாகப்படுத்தவேண்டும். இயற்கை வர்க்கமான பொருள் முதலியவைகளை உபகரணமாக வைத்துக்கொண்டு போதனைக்கு ஆரம்பிக்கவேண்டும். இதுபற்றியே சில பாடசாலைகளில் பட்சி முதலிய சிறு பிராணிகளை வளர்க்கிறார்கள். ஆனால் பிள்ளைகள் பயத்தையடையும்படி செய்யக்கூடாது. குழந்தைகள் பிற்காலத்தில் இயற்கை இன்னதென ஆராய்ந்தறியவும் கடவுள் பக்தி இன்னதென அறியவும் உபாயமாகக் குழந்தைப்பருவத்தில் மேகம், மழை, இடி, வானவில், சூரியன், சந்திரன், தாவரங்கள், பிராணிகள் முதலியவைகளைக் கவனிக்கும்படி செய்து அவர்களை உற்சாகப்படுத்தவேண்டும்.

குழந்தைகளுக்குத் தேகப்பயிற்சி அதிக அவசியமானதால் பாடசாலை நேரத்தில் அதிகபாகம் அவர்களை விளையாட்டில் விடவேண்டும். கைகளால் வேலைசெய்வதால் மூளைக்குப் பயிற்சி உண்டாகிறது. ஆகவே குழந்தைகளுக்குத் தேகப்பயிற்சிகொடுக்கும்போது விரல்களுக்குப் பலவிதமான

வேலை கொடுப்பதுடன் குழந்தைகள் உற்சாகமாய்த் தேகப்பயிற்சி செய்வதற்கான பாடல்களுடன் தேகப்பயிற்சி கொடுக்கவேண்டும். கடினமான தேகப்பயிற்சி தரக்கூடாது.

எலிமெண்டரி பாடசாலைகளில் அஸ்திவாரப்படிப்பைப் பயிலும் வகுப்புக் குழந்தைகளின் தன்மையைக் கண்டறிந்து, குழந்தைகளோடு குழந்தையாகி, குழந்தைகளின் சுய இச்சைக்கிணங்கி விடுத்து, குழந்தைகளிடம் அன்பு காட்டி முகமலர்ந்து போதிக்கும் திறமை, பாடசாலையில் அநுபவமான (சர்வீஸான) ஆசிரியர்களுக்கே உண்டு. இத்தன்மைவாய்ந்த அநுபவ ஆசிரியர்கள் சிலர் "அதிகமான அநுபவமடைந்து சம்பளம் உயர்வாகப் பெறுகிற நாம் குழந்தைகளோடு பூரா நேரமும் விழித்திருந்து உழைப்பானேன்?" என்ற நோக்கத்தைக் கொண்டவர்களாகி வாசிக்கத் தெரிந்த பிள்ளைகளுக்குக் கருப்புப்பலகையில் சில வேலைகளைக் கொடுத்துவிட்டு எதிரிலுள்ள மேஜையின்மேல் சாய்ந்து கண்மூடித் தபம் செய்கின்றார்களே. அந்தோ! இதுதானு உலக க்ஷேமம் கருதும் உபாத்திமார்களின் தன்மை. எல்லாம் வல்ல கடவுளே மேற்கூறிய எண்ணம்வாய்ந்த சர்வீஸான தலைமை உபாத்திமார்களுக்கும் ஏனைய சர்வீஸ் உபாத்திமார்களுக்கும் குழந்தைகளின்மேல் கருணை வரச்செய்து உதவிபுரிய வைத்தருள்வாராக.

(தொடரும்.) கா. சு. வையாபுரிப்பிள்ளை,
ஹெட்மாஸ்டர், போர்டு பஞ்சம ஸ்கூல், வீரளூர்.

---

## அகம்புறக்காட்சி விளக்கம்.

சுத்த சத்திய சமரச சன்மார்க்க நேயர்காள்!

மகா கடல் சூழ்ந்த இப்பிரபஞ்சத்தின்கண் புறக்காட்சி அகக்காட்சியென்றிரண்டுவகையுள்ளன. அவற்றில் புறக்காட்சி யென்பது கண்ணுக்கே தோற்றுமுருவாயிருக்கின்றது. அகக்காட்சி யென்பது கருத்துக்கே தோற்றும் சூட்சும வஸ்துவாயிருக்கின்றது. இந்தக் காட்சிகளிரண்டில் நின்றும் புறக்காட்சியான மழையைப்பற்றி ஆராய்வாம். இது ஒரே இனமாயினும் பல தோற்றங்களைக்கொண்டுளது. அவற்றில் இரண்டுவகையான காட்சிகளைமட்டும் விவகரிக்கின்றேன். 1-வது ஆலாகாயத்திலிருந்து பெய்யும் மழையானது சமுத்திரத்தின்கண் வசிக்கும் சிப்பியின் வாயிற் றங்குஞ் சிறு திவலையாய் நாளடைவில் முத்தாய்விடுகின்றது. அதன்கண் வெண்மேகம் போன்ற சோதி பிரகாசிப்பதினுல், அது, அரசர்கள் முதல் தாழ்ந்த மனிதர்கள் வரையிலுள்ள எல்லாருடைய மனதையுங் கவர்ந்துகொள்ளும் ஒருவித சக்தியும், அழகும் வாய்ந்திருக்கின்றது. இன்னும் அது இவ்வுலகங்களையெல்லாம் பகுதிபகுதியாக ஆண்டுகொண்டிருக்குங் கிரீடாதிபதி முதல் சிற்றரசர் வரை தம் தம் சிரமேல் வைத்திருக்கும்படியான கிரீடங்களைச் சூழ்ந்திருந்து சொல்லரிய பிரகாசத்தைத் தருகின்றது. அவர்களின் கண்டத்தில் போடும்படியான சரப்பணி மாலைகளாகவும் விளங்குகின்றது. அவர்களிரு

ந்து அதிகாரஞ் செய்யும்படியான சிம்மாசனத்திற் பதியவைத்து, பார்ப்ப வர்களின் கண்களையெல்லாம் மயங்கச் செய்கின்றது. இதுபோல் மற்றும் ஏனையோர்களான சர்வசாதிகளும் தம் தம் தகுதிக்குத் தக்கதாய் வாங்கிய வர்களிஷ்டம்போல் பூடணஞ் செய்து அணிவதற்கு மிகவும் விருப்பமுள்ள தாயிருக்கின்றது. வைத்தியர்களால் அனேக மருந்துகளில் சேர்க்கப்பட்டு சக்தியில்லாதவர்களுக்குச் சக்தியும், சரீரதேஜஸும் உண்டுபண்ணத்தக்க தாயிருக்கின்றது.

2-வது. அம்மழைநீர்த் திவலை அரவின் வாய்களிற் றங்கும்போது கொடிய விஷமாகமாறி, சீவராசிகளுக்குப் பிராணபத்தையுண்டாக்குகிறது. மற்றும் இவ்வரவைக்காணும் ஜீவராசிகள் மிரண்டோடத்தக்க பயமும் திகிலும் அடையநேர்கின்றது. இதின் பெயர் நல்ல பாம்பென்று உலகத் தில் சொல்லும் வழக்கமிருக்கினும் இதின் கெடுதி காரணமாய் மிகவுங் கொடியதென்று கூறி இகழவு மேற்படுகின்றது. மனிதர்கள் வசிக்குமிடங் களில் சர்ப்பம் காணப்பட்டால் அதைக் கைப்பற்றுமளவும் அவ்விடத்தி லெவரும் பிரவேசிப்பதில்லை. அது சென்றவிடங்களி லதினடையாள மிருக்கக்கண்டாலும் உடனே சந்தேகமுண்டாகி விலகியோடநேர்கின்றது. இன்னுமிதின் வடிவங்காணுத சிறு குழந்தைகளிடத்தில் இதோ பாம்பு வருகிறதென்று பயமுறுத்தினுல் அக்குழந்தைகள் உடனே வாய், கை, யுடல் நடுங்கி முகம் பேதலித்து, கண்ணீர் வடிய அழுது வெகு வேகமாய் மிரண்டோடி, தாய் மடிமீது விழுந்து, இருகரத்தால் பற்றிப் பிடித்து முகங் காட்டாது மௌனமாயிருக்கின்றன. ஆனுல் ஜலம் ஒன்ருயிருப்பினும் அது தங்கும் பாத்திரங்களெந்நிறமோ அந்நிறத்தையே பகிர் முகமாய்க் காட்டுவதுபோல் அந்தந்த வடிவங்களி லமைந்திருக்கும் சிற்சத்தியே அந் தந்த வடிவாகார மாருமல் வெளிப்படுத்திவைக்கின்றது. இதைக்குறித்துக் கைவல்யத்தில் "கருப்பை முட்டையுட் பறவைகள் பல நிறம் கலந்த சித்தி ரம்பாராய், அருப்பமாஞ் சத்தி நியமமில்லாவிடி லரசிலா நகர்போலாம்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இனி அகக்காட்சியான சூட்சுமப்பொ ருள் ஒரே தன்மையாயிருக்கினும் அதிலிருவகையான காட்சிகள் தோற்றப் படுகின்றன. அவற்றின் விவரம் பின்வருமாறு:

3-வது மறைவான ஆன்ம லோகத்தில் நின்றும் பெய்யும்படியான சூட் சும அருள் மழையானது சுத்த சத்துவகுண சாந்த இருதயமுள்ள மனிதர்க ளிடத்தில் தங்குவதனுல் அவர்கள் அருமையான வைதீக சன்மார்க்க ஞானே தயமாகி, சர்வஞ்ஞான அனாதி யன்புருவ சோதிமயமொன்றையே கருதி, யவரருள் வேதவிதி தவருதொழுகி, பயபக்தி விசுவாசத்தோடிருந்து தன் னுண்மையறிகின்ற ஞானமென்னும் வெள்ளப்பெருக்கை யெவ்வேளையும் விருத்தி செய்துகொண்டே யிருப்பர். இன்னும் எவ்வகை இதர அத்தாட் சியுமின்றித் தம்மனுபவத்தால் மேலிடும் அருள்ஞானப் பேரொளியினுலுண் டாகும் நம்பிக்கையைவிட்டு, அற்ப அளவும் மனமசையாம லெப்பொழு

தும் ஸ்திரமாகவு முறுதியாகவு மிருந்துவருவார்கள். இன்னுங் கண்ணாடியிற் றம் முகங்காணுமாப்போற் றம்முள்ளமென்னுஞ் சுத்த சத்துவகுண கண்ணாடியிற் றோன்றும் ஒப்பற்ற பரிபூரண வகண்டாகார விசேஷஞான விருத்திகளைக் கண்டு அம்மயமான சுயராச்சியப் பேரின்பத்தாற் றாண்டவமாடிக்கொண்டிருப்பர். இதைக்குறித்து ரிபுகீதையில் (சித்துருவாம் பரப்பிரம சொரூபத்தின்கண் க்ஷீரசல நியாயம்போற் சேர்ந்துநிற்கும், புத்தியுடை விருத்தியினிற் பிரதிபிம்பிக்கும் பூரண சைதன்னியமே சாட்சாத்காரம்) என்று கூறப்பட்டிருக்கின்றது. இன்னுந் தம்மை யெழுநரகிற் சேர்க்கும்படியான அசுர சம்பத்தென்னும் துற்குணப் போர்வீரர்களைச் செயிக்கத்தக்க மேலான தெய்வ சம்பத்தென்னும் நற்குணப் போர்வீரர்களைச் சேகரித்து, சத்தியமென்னுங் கச்சையை யரையிற் கட்டி, நீதியென்னும் சன்மார்க்கக் கவசத்தைத் தரித்து, எல்லாவற்றுக்கு மேலான விசுவாசமென்னுங் கேடகத்தைக் கரத்திற்பிடித்துச் சாந்தமென்னுங் கிரீடத்தைச் சிரமேல் வைத்து, நானெனதென்னுங் கிருத்தியப் பேய்களிரண்டையுந் தமக்குப் பாதரட்சையாகச் செய்து, ராகத்துவேஷமாகிய இருவர்களையு மூட்டை சுமக்கும்படியான அடிமையாக வைத்து, அருள்வடிவே தாமாக விருந்து அகமார்க்கப் போர் செய்வதுடன் சர்வ ஜனங்களும் ஒருவர்க்கொருவர் பொறாமை, விரோதம், பகை முதலானவைகளில்லாமல் சமரச பாவனையோ டொருமனதாய் நேசமும் பாசமும் அதிகரிக்கத்தக்க சமாதானமென்னும் அத்துவைதக் கொடியையெப்பொழுதும் நாட்டிவைத்து அதுவே சர்வ விடங்களிலும் பறந்தாடிக்கொண்டிருக்கச் செய்வார்கள். இன்னும் இவர்கள் எவராலுஞ் சொல்லவும் அறியவும் இயலாத அனந்த சூட்சும உலகங்களில் சென்று அங்குள்ள அரிய பெரிய புதுமையான காட்சிகளைக் கண்டு உள்ளங் களிப்படைந்து தம்முள் சகிக்க இயலாத ஆனந்தத்தால் அடிக்கடி குறுஞ்சிரிப்புள்ளவர்களாயிருந்து வருவார்கள். இன்னும் தேக சம்பந்தமான சாதிபேதமும், அறியாமையால் நேரிடும் வேதவேற்றுமையும் நானென்னு மகங்கார நினைவினாலுண்டாகும் சர்வ தொழிலுமற்று, சிறு குழந்தையின் குணமுள்ளவர்களாகவும் பார்ப்பவர் தம்மை நகைக்கும்படியான பெரும் அசுசியுள்ளவர்கள்போலிருந்தும் வருவார்கள். இன்னும் சர்வ ஜனங்களும் தெய்வீக இரகசிய உண்மை இன்னதென்றறிந்து அதின்படி நினைப்பும் சொல்லுஞ் செய்கையும் ஒருமைப்பட்டிருந்து மோட்சமடைவதற்கு வேண்டுமான பக்தி, உறுதி, பொறுமை, சாந்தம், அறிவு, அடக்கம், ஒழுக்கம், கருணை முதலான நற்குணங்களைப் பெறவேண்டும். அப்படி அவற்றைப் பெறுவதற்கும் ஒருவர்க்கொருவர் சகோதரவாஞ்சையோடதிக ஆவலும், பற்றும், பிரியமும், பாசமும், நேசமும் மாறாதிருப்பதற்கும் தங்கள் இருதயமென்னும் ஆழிய சாகரத்தில் வியாபகமாய் நிறைந்திருக்கும் பரிசுத்த அன்பென்னும் ஞான ஜீவ தீர்த்தத்தில் நிற்கவேண்டும். நின்று சதாகாலம் ஓயாமலெழுந்து ஒன்றோடொன்று மோதி வெளிப்பட்டுக்கொண்டே யிருக்கும் நிகரற்ற அலைகளான ஞான இரத்னங்களை

ஜனங்களின் காதின் வழியாய்ச் செலுத்தி மனமெனும் பூமியிற் பதியவைத்து அது வோங்கி வளர்ந்து ஞானக் கனிகளைத் தந்துகொண்டிருக்கும் படியாகச் செய்யவேண்டும். இப்படிச் செய்துவைத்து எவ்வேளையுந் தம்மையெந்தக் கருமத்திலும் தாழ்த்தியே காணுவார்கள். இன்னும் அவர்கள் போதிக்கும் பரமார்த்த சூட்சும ஞானங்களைக் கேட்பவர் தம் மனதில் பதியும்படியான நன்னோக்கத்தை மனதில் வைத்து ஆமைபோல் கருதிக்கொண்டே யிருப்பார்கள். அன்னியர்கள் எவ்வளவுக்கெவ்வளவு அடுத்தடுத்துக் கேட்கினும் தாம் கிஞ்சித்துங் கோபங்கொள்ளாது சுருதி யுக்தி அனுபவ மூலமாய் விடைபகர்ந்துகொண்டே யிருப்பார்கள். ஏனையோர்கள் தம்மைப் புகழ்ந்து கூறுவதற்கு வேண்டுமான பெருமைத் தொழிலெதையுஞ் செய்யார்கள். தெய்வீக சம்பத்தென்னும் நற்குண முத்துகளைத் தெளிந்தெடுத்து மாலையாகக் கோத்துத் தம் அங்கமெல்லாம் அலங்கரித்துக்கொள்வார்கள். அறிவிலார் தம் சிந்தையின் அசுபவாசனையாற் கூறும் நிந்தை யெத்தன்மையான கொடியதாயிருப்பினும் அவ்வித நிந்தைகளைத் தம் செவியுற்றுக் கிஞ்சித்துங் கவனியார்கள். திரிசியமாயிருக்கிற அகங்காராதி பிரபஞ்ச தோற்றங்களில் யாதொரு பற்றும் வைத்துக்கொள்ளார்கள். இகபரமென்னும் பேதவாழ்வைச் சற்றேனுங் கருதி அதற்கு வேண்டுமான முயற்சிகளெவைகளையுஞ் செய்யார்கள். சராசரம் யாவும் தம் உள்ளத்தில் நின்றும் வெளியானதாகக் கருதி அவைகளுக்கு யாதொரு தீங்குஞ் செய்யாமல் சிந்தை யேகாக்கிர நோக்கமாயிருந்து வருவார்கள். இவர்களுக்குண்டாயிருக்கும் குணாதிசயங்களைப்பற்றி யெவராலுங் கூறவொண்ணாது. கோடிகாகத்துக் கிடையே காணப்படும் வெண்மையுள்ள கொக்கொன்றைப்போல் இவர்களும் மனிதர் கூட்டங்களுக்கிடையே மிக அருமையாய்க் காணப்படுகின்றனர். இவர்கள்தான் உள்ளபடி பரப்பிரம ஸ்வரூபத்தை அபரோக்ஷமாய் அறிந்தவரும் அறிந்தபடி ஞான சாதனைகளினால் விடாமுயற்சியோ டப்பியாசித்து மனோவாசனைகள் நீங்கிப் பாலிலொருமையான ஜலம்போலே மனது ஆன்மாவினிடத்து ஏகரசமாய் இலயமானவரும் அந்தப் பரமானந்த சொரூபமாகிய ஆன்மா சுயஞ்சோதி யருள்வடிவப் பிரகாச சம்பூரணமாய் வாய்க்கப்பெற்றுத் தாமே அதுவாய் அதுவே அவராய் ஒப்பற்ற ஏக அறிவாய்ப் பார்க்கிறவரும், கேட்கிறவரும், அறிகிறவரும், உணருகிறவரும், விளங்குகிறவரும், பிரகாசிக்கிறவரும், சாட்சியாயிருப்பவருமா யிருப்பார்கள். இதுவிஷயமாய் குரு ஆனில் (அவனைப்போ லொரு வஸ்துவுமில்லை. அவனுகிறவன் கேட்கிறவன்; பார்க்கிறவன்) என்று திருவுளமாயிருக்கிறது. இந்த நிலையில் நாமரூப பேதாபேத மனிதபண்பு முதலானவைகளெல்லாம் நாஸ்தியாகிச் சுத்த நிர்வாணமாயிருப்பார். இதுவிஷயமாய் பிருகதாரணியக உபநிஷத்தில் (அத்விதீயப் பிரஹ்மமுளது. இங்கு நானா வென்பது சிறிதுமில்லை) என்றும் வராகோபநிஷத்தில் (பிரஹ்மஞானத்தால் மாயையும், அதின் காரியமும் நீங்கியபோது ஈசுவரத்தன்மையுமில்லை, ஜீவத்தன்மையுமில்லை) என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன.

இவ்விதமான அனுபவம் வாய்க்கப்பெற்ற மகான்களைப்பற்றிக் குரானில் கடவுளே சாட்சி கூறுகின்றனர். அதில் (தம்முடைய ஆண்டவனைக்கொண்டும் இவர்கள் நேர்வழியிலிருக்கிறார்கள். இன்னும் இவர்களே ஈடேற்றம் பெறுகிறவர்கள்) என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஐயோ இக்காலங்களில் அனேக மனிதர்கள் யாதொரு சாதனை யப்பியாசம் நிட்டை முதலானவைகள் அறவே இல்லாமல் முன்னோர்களால் பாடிவைத்த ஞானப்பாடல்களை மனனஞ்செய்து சுருதியுக்தி அனுபவங்களுக் கொவ்வாமல் அவர்களின் கருத்துக்கிணங்கியவா றெல்லாம் பொருள்வைத்து நானே பிரமமென்று மாயா சம்பந்தமான மனக்கோட்டை கட்டி அந்தரத்தில் ஊஞ்சலிட்டாட்டி, வாய் ஞானப்போலிகளாய் வெறும் பதர்களை அளவின்றிப் பெரும்பாரமாய்க் குவித்துவருகின்றனர். அந்தோ அனுபவமாய் வாய்க்கும் சுத்த விருத்தி ஞானமென்னும் சண்டமாருதக் காற்றுக் கெதிரே இது நிலை நில்லாதென் றிவர்க ளறியாதிருப்பதுடன் கடவுளின் திருவருள் வேத விதி விலக்கு இன்னவென்றுணர்ந்து அவற்றின் வழியும் நடவாமல் தாம் கெடுவதன்றி மற்றப் பேர்களையுங் கெடுத்துவிடுகிறார்கள். இவர்களைக் கண்டால் வேடர் கைதப்பி யோடும் மானைப்போல் மிரண்டோடுவதே நலம். இவர்களின் அறிவீனத்தைப்பற்றி எழுதினால் விரியுமென்றஞ்சிச் சுருக்கமாய்க் காட்டினேன். ஆனால் மேலெழுதிய மகான்களான அனுபவமுள்ள பெரியோர்கள் முத்தைப்போன்றெவரும் உவக்கத்தக்கவரா யிருப்பார்கள்.

(தொடரும்.) K. K. செய்கப்துல்காதிர்,
மேலப்பாளையம்.

---

## நாரதரும் 60 பிள்ளைகளும்.

நமது இந்து சாத்திரங்களில், கல்விமான்களுடைய பூர்ண சாமார்த்தியங்களும், கவீஸ்வரர்களுடைய அருள் பிரசாதங்களும், ஒவ்வொரு இடங்களில் மகிமை விளங்கும்படி செய்திருக்கும் திருட்டாந்த சமத்காரங்களும், அவர்களிடம் கடவுள் பிரத்தியக்ஷமாகி, அநேக விளையாடல்கள் செய்ததும், மதி ஈனர்களுக்கும் அறிவைப் புகட்டுகின்றன. மாதர்கள் நடந்த ஒழுக்கங்களும், காதலனைக் காப்பாற்றிக் கடைத்தேற்றியதும், துஷ்டர்களைக் கற்புத்தீயாலெரித்ததும், திக்பாலர்களைத் தவிக்கச்செய்ததும், தெய்வ பலத்தை வகித்துப் பார்ப்போர் மனம் திடுக்கிடும்படி செய்த விஷயங்களும் அநேகமுண்டு. நமது பாரத, பாகவத, இராமாயண, புராண, அடியார்கள் சரித்திரங்களில் பல நீதிகளையும், தர்மங்களையும், குலாசாரங்களையும், ஒற்றுமையையும், மாதா பிதாக்களிடமிருக்கும் பக்தி விஸ்வாசங்களையும், சகோதரர் நன்னெறியையும், மித்திர வாத்ஸல்யங்களையும், பெரியோர்களிடம் வணங்கித் துதித்தலையும் இவைபோன்ற இதர சத்கர்மங்களையும் பலரும் நன்கு அறிவர். ஆயினும் ஆதிகாலம் தொடங்கி அனுபவத்திற்கு விளங்கும் முன்னோர்கள் நூல்கள் பல உள. தெய்வப் புலமைவாய்ந்த மகா

சித் புருடர் வரைந்துள்ள தத்வ சாத்திரங்களும் நல்லறிவு கூறுகின்றன. நமது "ஆனந்தபோதினி"யில் மாதம்தோறும் வெளியாகும் வியாசங்களும் ஆநந்தமாகவே விளங்குகின்றன என்பதில் சந்தேகமில்லை. அடியேன் சிற்றறிவிற்கெட்டிய சில விஷயங்களை இங்கே கூறுவேனாக!

"ஆனந்தபோதினி"யில் குரோதன வருடம், சித்திரை மாதம் 1-ந் தேதி பிரசுரமான, 379-வது பக்கம் பால சோதிடம், திருநெல்வேலி ம-ா-ா-ஸ்ரீ, கே. எஸ் முத்துகிருஷ்ண ரெட்டியார், வரைந்துள்ள "குரோதன வருஷப்பிறப்பு" என்ற வியாசத்தில் கூறிய சில அம்சங்களைப்பற்றிக் கூறுவோம்!

பதினாறாயிரத்து நூற்றெட்டு ஸ்திரீகளிடத்திலும் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா விளையாடிக்கொண்டிருக்கும் காலத்திலோர்நாள், பிரம்ம மானச புத்திரர் நாரத மகரிஷி துவாரகைக்கு வந்து கிருஷ்ணமூர்த்தியிடம் சம்பாஷித்துக்கொண்டிருக்கையில், பரமாத்மா நாரதரை மாயையிலகப்படச் செய்தார். நாரதர் "ஸ்வாமீ! தாங்களிங்கிருக்கப்பட்ட எல்லா ஸ்திரீகளிடமும் ஆனந்தமாக விளையாடுகின்றீர்களே? அவர்களில் ஒரு பெண்ணை எனக்களிக்கலாகாதா?" என்று மிகுந்த ஆசையுடன் கேட்டனர். பகவான் புன்னகையுடன் "நாரதரே! தடை யாது? நானில்லாத வீட்டில் தாம் சுகமாக இருந்து போகலாமே?" என்று பகர்ந்தார். அதற்கிசைந்த நாரதர் துவாரகையிலிருக்கும் ஒவ்வொரு வீட்டிலுஞ் சென்று பார்க்க, ஒவ்வொரு வீட்டிலும் பகவானிருக்கக்கண்டு அலைந்து களையுண்டு நாட்டைவிட்டகன்று யமுனா நதியடைந்து நீரில் மூழ்கி யெழுந்ததும், மாயையினால் தம் சுயரூபம் நீங்கிப் பெண்வடிவடைந்து நின்றார். கிருஷ்ண பரமாத்மா அங்கு தோன்றிப் பெண்மையடைந்த நாரதரை யணைந்து பெற்ற அறுபது குழந்தைகளுக்கிட்ட பெயராகிய (பிரபவ முதல் அக்ஷய வரையில்) 60 தமிழ் வருஷங்களாகும். பின்னும் கிருஷ்ணபகவான் சொல்லியபடி நாரதர் யமுனையில் மூழ்கி யதாரூபமடைந்து விடைபெற்றேகினர் எனத்தெரிவித்துள்ளார் நண்பர்.

எனதன்பார்ந்த செல்வச் சீமான்களே! இராமாவதாரத்தில் தண்டகவன ரிஷிகளுக்கு அங்கசங்க விஷயத்திற்கு பகவான் ஸ்ரீராமர் துவாபர யுகத்தில், துவாரகை நகரில் கிருஷ்ணாவதாரமெடுத்து அவாள் கோரிக்கையை நிறைவேற்றுவதாகத் தெரிவித்தபடி 16108—கோபிகைகளுடன் லீலாவினோதம் காட்டியது வெளிப்படையே யாகும். நாரதரையும் அவ்வண்ணம் செய்வதென்பது விளங்கவில்லை. தவிர கிருஷ்ணபகவான் கீதா சாத்திரத்தில் கூறியதத்வோபதேசங்களில் நல்வழி காட்டியிருக்க, தாமே நாரதருக்கு மாயையை யுண்டாக்கி, கலங்கச்செய்து, எங்கும் தாம் நிறைந்திருந்தும், நாரதர் தவித்து யமுனையில் மூழ்கிப் பெண்ணுருவடைந்து கிருஷ்ணமூர்த்தியை மருவி கர்ப்பமோங்கி 60 - பிள்ளைகளையும் பெற்று நாமகரணம் சூட்டிய விஷயம் உசிதமாகத்தோற்றப்படவில்லை. அது சாதா

ரண அஷ்டமா சித்திகளைச் செய்யும் மனுஷ்ய கிருத்தியமாகத் தோற்றப் படுகின்றது. ஒரு அந்தரங்கபக்தனை மயங்கச்செய்தும், பெண்ணுருவாக்கியும், அவனைக் கூடுவதென்பது கிருஷ்ண பகவானுக்குத் தகுதியான விஷயமாகுமா? மானிடராய்ப் பிறந்து மாயையி லகப்பட்டவர்களுக்கே தகுதியாகாதென்றால் பூபார நிவர்த்திக்காக அவதாரம் செய்த பரம்பொருள் துவாரகாநாதர், பற்றுதலில்லா லீலைகள் செய்தா ரென்பதே சாத்திர ஆராய்ச்சி. பக்தர்களை ரக்ஷித்தும் துஷ்டர்களை சம்மரித்தும், பூர்வ வரப்பிர சாதப்படி நடத்திக்காட்டியதே சிலாக்கியம். அசந்தர்ப்பங்களில் ஈடுபட்டார் என்பது நியாய விரோதமேயாகும். கிருஷ்ணபகவான் 16108—கோபிகைகளிடம் லீலைசெய்தது போதாமல் நாரதரையும் பெண்வடிவாக்கி இச்சித்தாரென விளங்குகின்றது.

பண்டித சதாவதானி லக்ஷமணாசாரியர் "அனசூயா உபாக்கியானம்" என்ற வியாக்கியானத்தில்:—வனத்தில் சஞ்சரித்திருந்த ரிஷிபத்தினிமார்கள் அத்திரி பத்தினி அனசூயைமீது பொறாமைகொண்டு, கற்பழிக்க முயற்சிக்கும் சமயம் அவ்வழியாகத் திரிலோக சஞ்சாரி நாரதர் வீணாகானம் செய்துகொண்டு ஏகமனதாக பகவானைத் துதித்தேகும் சமயம் ரிஷி பத்தினிகள் வந்தனம் கூறி அழைத்து, பத்தினி அனசூயையின் கற்பையழிக்க வேண்டுமென மந்திரபலத்தினால் மயக்கிவிட்ட நாரதர் சந்நியாசி வேடங்கொண்டு, அத்ரி ஸ்நான கட்டத்திற்குப் போயிருக்கும் சமயம்பார்த்து, அனசூயையிடம் பிச்சைக்கேகினர். கற்புக்கரசி காதலாய் காய்கனி வர்க்கங்களைக் கொண்டு சமர்ப்பித்து வந்த அதிதியைப் புசிக்கச் சொல்லியதும், நாரத கபடசந்நியாசி ரிஷிபத்தினிகள் சொல்லிய வார்த்தையின் படி பதிவிரதாதர்மத்தைச் சோதிக்கக் கருதி நிர்வாணபிச்சை தாருமெனக் கூறினர். செவியுற்ற கற்புடையாள் ஆஸ்ரமத்திற் குள்ளே சென்று, நாதனுடைய பாதோதக தீர்த்த கமண்டலத்தைக் கையிலேந்தி, சிறிது ஜலத்தைக் கபடசந்நியாசிமீது தெளித்தனள். அத்தண்ணீர்பட்ட உடனே நாரதர் யௌவன ரூபலாவண்ணிய ஸ்திரீவடிவ மடைந்தனர். நாரதர் வெட்கித்தலைகுனிந்து பத்தினியைத் துதித்து சுயரூப மளிக்கவேண்டுமெனப் பிரார்த்தித்தனர். அனசூயாதேவி அது தன்னால் முடியாத காரியமென்று தெரிவிக்க இரஜிதகிரிசென்று ஸ்திரீவடிவம் மாற்றிக்கொள்ள எண்ணங்கொண்டு பசுபதியிடம் சென்றார்.

அங்கு பார்வதீரமணன், நாரதர் பெண்ணுருவானதைப்பற்றி சந்தோஷித்து, நாரதா! இதுவரையில் புருடவடிவாய் நமது சாமவேதம் பாடிக்கொண்டிருந்தாய்; இன்று முதல் ஸ்திரீகண்டமாக சங்கீதத்தில் சாமவேதம் கானம் செய்துகொண் டிருந்தால் காதலி பார்வதியும், யானும் சுகமாகக்கேட் டானந்திப்போ மென்றாசிகூறினர். அங்கும் பலனில்லாமையால், தம் தந்தை பிரம்மதேவரிடம் சென்று, சரஸ்வதியும் பார்க்கப் புலம்பி நடந்தவரலாறு சொல்லி நின்றார். பிரம்மாவுக்குப் பல பிள்ளைக

ளிருந்தும் பெண்குழவி யில்லாக்குறையை, மாதாவாகிய அனசூயை நிறை வேற்றியதைப் பற்றிப் புகழ்ந்தானந்தித்து, வத்ஸா! நாரதா, நீ ஸ்திரீயா கவே யிருக்க யான்பார்ப்பது அழகல்ல; உனது கர்ப்பத்தில் பிள்ளைகள் பிறந்துபார்த்து ஆநந்திப்பதே சிலாக்கியமெனப் பிறகு நாரதர் திருமாலைத் துதித்தனர். அவர் வாக்குப்படி நாரத அம்மாளுக்கு கர்ப்பமோங்கி 60 - பிள்ளைகளைப் பெற்றார். அக்குழவிகளுக்கு, சதுர்முகர் "பிரதமபுத்ரேன பிரபவா, த்வீதியபுத்ரேன விபவா:," என்று பிரபவா முதல் அக்ஷயவரை யில் 60 - தமிழ் வருஷங்களாக நியமித்தனர். இது நமது பாரதநாட்டில் பூர்வீகமாக விளங்கிவருவதென்பது தெரிந்தவிஷயம். நாரதர் பெண்வடிவ மடைந்ததும், பிள்ளைகளைப் பெற்றதும், அனசூயதேவியினாலேயே சுயரூப மடைந்ததும், பிரதமத்தில் அத்ரி அனசூயை தவம்புரிந்து சந்ததிக்காக வருந்தியதும் மும்மூர்த்திகள் புத்திரராய்த்தாமே பிறப்பதாக வரந்தந்த தும், திரிசக்திகளும் மானசபூசைக்கு சுவர்க்கம் சென்றதும், நாரதராலவ மானமடைந்ததும்,ஹரிஹரபிரம்மாதிகள் பிச்சைக்குவந்து அனசூயையைப் பரீக்ஷித்ததும், மூன்று குழந்தைகளாக திரிமூர்த்திகளை அனசூயை யடைந் ததும், திரிதேவிகளுக்கும் பதிவிரதா மகிமை விளங்கியதும், ஸ்ரீ தத்தாத் தீரேயர் என்ற திருநாமத்துடன் அத்ரி அனசூயைகளுக்கு பிள்ளையுண்டா னதும் முதலிய விஸ்தாரமான விஷயம் பார்க்கவ புராணத்தில் காணலாம்.

இன்னும் பூர்ணவியாசம் வரைந்தனுப்ப நமது கல்விமான்களுக் கிச் சையிருப்பின் தவசிரேஷ்டராகிய அத்ரிமகரிஷி பிரதாபத்தையும், கற்பு டைய அனசூயை பிரதாப மகிமையையும், மத்தியில் நாரதர் அகப்பட்டு தவித்த பரிதாபத்தையும், மும்மூர்த்திகள் பத்தினியிடம் அகப்பட்டு பல்லி ளித்த பரிகாசத்தையும், லக்ஷ்மி பார்வதி தமது பர்த்தாக்களை விட்டு மன ஸ்தாபப்பட்டதையும், திரிமூர்த்திகளும் "தத்தாத்ரேயர்" வடிவடைந்து நாளைக்கும் அத்ரி அனுசூயையின் பிள்ளையாக விளங்கும் பிரதாபத்தையும் சரிவரக் காணலாம். ஸ்ரீ தத்தாத்திரேய மூர்த்தியை உபாசித்து பல சித்து கள் விளையாடுகின்றனர். இந்தமூர்த்தியைத் துதித்தவர்கள் மும்மூர்த்தி களுடைய அருளையடைவர்.

ஆனால் நமது பாலசோதிடம் ரெட்டியாரைப்பற்றிக் குற்றமாகக் கூற வில்லை. சோதிட சாத்திரத்திற் குரிய பலாபலன் குரோதனவருடம் அதா வது 59-வது ஆண்டைப்பற்றிக் கூறியதாயினும் நாரதர் பெண்வடிவ மடைந்து, கிருஷ்ணபரமாத்மாவை மருவி 60 - புத்திரர்களைப் பெற்றார் என்பது அவ்வளவு உசிதமாய் விளங்கவில்லை. நாரதருக்கு 60-குழந்தைகள் உண்டான விஷயம் பிதாவாக்கினால் வரமடைந்து பிறந்த குழந்தைகள் 60-வருடங்களாக விளங்குகின்றன வென்பது பிரசித்தம். நாம்கூறியவியா சத்தில் குற்றமிருப்பினும் மன்னிக்கக் கடவீர்களாக.

"சர்வோஜனா சுகினோபவந்து."

ஜி. வி. இரங்கய்யநாயுடு,
S. M. I. Co., East Street, Poona.

# மாதர் நீதி மஞ்சரி.

(379 - ம் பக்கத் தொடர்ச்சி.)

## கற்பரசிகள்.

நமது பாரதநாடு, நாகரீகம், பரோபகாரம், வள்ளற்றன்மை (ஈகைக்குணம்) நல்லொழுக்கம், வீரம், சாந்தம், கற்பு முதலியவற்றில் மற்றெல்லா நாடுகளினும் சிறப்புற்று விளங்கிய தென்பது மறுக்கமுடியாத உண்மை. இந்நாட்டுமாதர்களிற் பலர் தம் கணவரைத் தெய்வமாகப்பாவித்து இல்லறவொழுக்கத்தை இனிது நடத்திவந்தனரென்பது சரித்திரங்களின் வாயிலாக வெளியாகின்றது. கற்புத்தன்மை யானது பல வாண்டுகளாகப் பஞ்சாக்கினி மத்தியினின்று செய்யும் தவத்தைவிடச் சிறந்ததென்பது அம்மாது சிரோமணிகள் இயற்றிய அற்புதச் செயல்களால் அறிதலாம்.

தற்காலத்துப் பெண்கள் பூர்வகாலத்தி லிருந்த புண்ணியவதிகளின் சரித்திரங்களைப் படித்து அவர்களது ஒழுக்கங்களையும், அந்நல்லொழுக்கங்களால் அவர்களடைந்த அளவிலா நற்பேறுகளையும் அறிந்து அவ்வுத்தமிகளைப் பின்பற்றி யொழுக முயலல் வேண்டும். புலியிருந்த விடத்தில் பூனையிருப்பதுபோல, மிகச்சிறந்தகற்பரசிகள் வசித்துவந்தநாடு இப்போது எவ்வித நிலையிலுள்ள தென்பதைப் பற்றிச் சிறிது சிந்தித்த லவசியம். ஆதலால் நமது புராண இதிகாசங்களில் வனிதாமணிகளின் வரலாறுகள் விரிவாகக் கூறப்பட்டிருப்பினும் ஞாபகப்படுத்தும் பொருட்டுச் சில பதிவிரதைகளின் சரிதையை இங்குச் சுருங்கக் கூறுவது அவசியமாகும்.

கற்பரசிகளின் பெயர்களைச் சொல்ல விரும்பும் யாவரும் முதல் முதலாக அருந்ததி அனுசூயை என்னும் இவர்களைத்தான் சொல்வதுவழக்கம். ஆகையால் அவர்களைப்பற்றிச் சிறிது கூறுவோம்.

அருந்ததி:—இவ்வம்மையார் சப்தரிஷிகளி லொருவராகிய வசிட்ட முனிவரின்பாரி. கணவனைத் தெய்வமாகப் பாவித்து அவர் சொல்லைக்கடவாமல் இல்லற நடாத்திவந்த உத்தமி. இவர் கர்த்தமப் பிரஜாபதியின் அருந்தவப் புத்திரி. சிவபெருமானே ஒருகாலத்தில் இவரது கற்பைப் பரிசோதிக்கவேண்டி சுகுமார வடிவங்கொண்டு வந்த பொழுதும் கலக்கமடையாத மனமுடையவரா யிருந்தார்.

இவர் ஒருநாள் நீர்கொணரக் குடங்கொண்டு போகையில் இந்திரன் அக்கினி சூரியன் இம்மூவரும் அவரைச் சோதிக்க வந்தார்கள். அவர்களில் இந்திரன் அவ்வம்மையார் வைத்திருந்த குடத்தில் கால்பாகம் நீரிருக்கும்படிசெய்தான். மற்ற இருவர்களும் அப்படியே நிறைக்க அக்குடம்முக்கால் பாகம் நீருள்ளதாயிற்று. அவ்வளவில் அருந்ததியார் மற்ற கால் பங்கையும் தம் மகிமையால் நிரப்பிக்கொண்டு வீட்டை நோக்கித் திரும்பிவிட்டார்.

அக்கினி தேவனானவன் சப்தரிஷிகளின் பத்தினிகள்மேல் காதல் கொண்டான். அதை யறிந்த அவன் மனைவியாகிய சுவாகாதேவி அந்த

ரிஷிபத்தினிகளைப் போல வடிவந்தாங்கிவந்து தன்கணவனைக்கூடி அவன் ஆசையை அகற்ற முயன்றாள். முயன்றவள் மற்றவர்களைப்போல அருந்ததியின் உருவத்தையு மேற்பமுயன்று முடியாமையால் வெட்கி மனம் வாடினாள்.

அருந்ததி தன் கற்பின் மகிமையால் தன் கணவருடன் நக்ஷத்திர வடிவமாயிருக்கும் பாக்கியம் பெற்றவள். அவ்வருந்ததி நக்ஷத்திரத்தையே விவாககாலத்தில் மணமகளுக்குக் காட்டி இவ்வருந்ததியைப்போல நீயும் பதிவிரதையாயிருவென மணமகன் கூறுவது வழக்கமாயுள்ளது.

அனுசூயை:—அத்திரிமுனிவர் மனைவி. இவரது கற்பின்திறத்தை யறியும்பொருட்டு நாரதர் இவரிடம்சென்று ஆடையின்றி அன்னம் படைக்குமாறு கேட்க இவ்வம்மையார் தன் கணவனது கமண்டல நீரைத் தெளித்தார். அவ்வளவில் நாரதர் பெண்ணுக மாறினர். அப்பொழுது அவர் அபீஷ்டப்படி அன்னம் படைக்க, நாரதர் வெட்கமடைந்து மும்மூர்த்திகளிடம் சென்று வேண்டியும் அவ்வுருவம் நீங்கப்பெறாமல் மீட்டும் அவ்வம்மையாரையே வேண்டிப் பழையவடிவம் பெற்றுச் சென்றார்.

சரஸ்வதி, பார்வதி, இலக்குமி யென்னும் இம்மூவரும் அனுசூயையின் மேன்மையைக் கேட்டு அசூயை கொண்டு தம் கணவரைத் தூண்ட அவர்கள் வார்த்தைக் கிசைந்த பிரம சிவ விஷ்ணுக்களாகிற முப்பெருந்தேவர்களும் அக்கற்பரசியிடம் சேர்ந்து முன் நாரதர் கேட்டவண்ணமே ஆடையின்றி அன்னம் பரிமாறும்படி கேட்க, உடனே அம்மூவரையும் சிறுகுழவிகளாக்கித் தொட்டிலிற் கிடத்தித் தாலாட்டினர். பின்பு அம்மூர்த்திகளின் மனைவியர் மூவரும்வந்து வேண்ட அவர்களைப் பழையவடிவாக்கினர்.

திருமால் இவ்வம்மையாரது கற்பை விளக்கக்கருதித் தம்மனைவியையும் பார்வதியையும் சரஸ்வதியையும் நோக்கி அவர்களிடம் இரும்புக்கடலையைக்கொடுத்து இதைப் புசிக்கும்படியாகச் சமைத்துத் தரும்படி கேட்டு அவர்களால் முடியாமற் போகவே அனுசூயையிட மீந்தார். அவர் அதை ஏற்று உடனே பாகஞ்செய் தளித்தார்.

ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியாரோடு அரணிய மேகினபொழுது சீதைக்குக் கற்பிலக்கணத்தைக் கற்பித்து ஆசீர்வதித்த காரிகை.

கண்ணகி:—காவிரிப்பூம் பட்டினத்தி லிருந்த கோவலன் மனைவி. இவர் தமது கணவன் தம் கூட்டுறவை விட்டு ஓர் தாசியின் வசப்பட்டுத் தம் செல்வ முழுவதையும் அவளுக்கே கொடுத்து வேசிகாந்தனுய்த் திரிந்துகொண்டிருந்த காலத்தும் அவன்மேற் சிறிதும் வெறுப்பின்றி அவனையே தெய்வமாகக் கருதியிருந்தார். தம் கணவனது துஷ்கிருத்தியங்களைச் சிறிதும் வெளியிடாமலும் தம்துக்கத்தை வெளிப்படுத்தாமலும் இல்லறத்தைச் செவ்வனே நடத்திவந்தார். செல்வத்தையெல்லா மிழந்துவிட்ட பின்பு, கோவலன் தன் மனையையடைந்து தன் அறியாமைக்காக வருந்திக்கொண்டிருந்தான். உண்மையுணராத கண்ணகி தன் காமக்கிழத்திக் கீயப் பண

யில்லாமையால் இவ்வாறு துக்கிக்கிறான்போலும் என்றுன்னி மிகுதியாகத் தன்வசமிருந்த காற்சிலம்புகளைக் கழற்றித்தர அவளுடைய பெருந்தன்மை யைக்கண்ட அவன் மிகவும் வருந்தி ஆ ஆ! இத்தகைய பத்தினிக்குத் துரோ கஞ்செய்தேனே' எனத்துக்கித்து அவரையு முடன்கொண்டு மதுரையை யடைந்து அச்சிலம்புகளி லொன்றைப் பெற்று விற்கச்சென்றான். சென்ற விடத்து ஓர் தட்டான் வார்த்தையைக்கேட்டு அவ்வூரரசன் அவனைத் திரு டனென மதித்துக் கொலைபுரிவித்தான்.

அக்கொடுமையை யறிந்த கண்ணகி கோபவெறிகொண்டு அரசவை யடைந்து தன்னிடமிருந்த மற்றொருசிலம்பால் தன் நாதன் கள்வனல்ல னெனக் காட்டித் தன் மார்பைத்திருகி வீசியெறிந்தார். அதனால் அந்நகர் எரிந்து சாம்பராயிற்று. அவ்வளவில் கண்ணகி தன் கொழுநன் பிரிவை யாற்றாமல், அல்லற்பட்டு மலைநாட்டை யடைந்து ஓர் மலையின்மேலேறி உயிர்விடுந் தருணத்து தேவர்களோடு கணவன் அங்குவரக் கண்டு களிப் படைந்து அவர்களுடன் விமான மூர்ந்து விண்ணுலகடைந்தார். அக்கா லத்திருந்த அரசர் பலர் அவருக்குப் பலவிடங்களில் ஆலயமியற்றி அருச் சித்துவந்தனர்.

இவரைக் கற்பின்தெய்வம், பத்தினிக்கடவுள், மங்கல மடந்தை, வீர பத்தினி யெனப் பல பெயர்களா லழைத்துத் துதித்துப் பலர் நற்பேறு பெற்றனர்.

கோப்பெருந்தேவி:—இவர் கோவலனை யாராயாமல் கொல்வித்த மதுராபுரிக்கரசனாகிய பாண்டியன் நெடுஞ் செழியன்மனைவி. கோவலனைத் தீரவிசாரியாமல் கொலை செய்வித்ததற்காக வருந்தித் தன் கணவன் உயிர் துறந்ததைக் கண்டு தானும் அக்கணமே உயிர் விட்டார்.

காந்தாரி:-திருதராட்டிரன் மனைவி. துரியோதனன் முதலியவர்களின் தாய். திருதராட்டிரன், பாண்டு என்னு மிவர்கள் சிறியவர்களா யிருந்த பொழுது, பீஷ்மர் காந்தார தேசாதிபதியாகிய சபலனிடத்து ஆட்களை யேவி அவனுடைய மகளைத் திருதராட்டிரனுக்கு மணம் பேசும்படிக்கூறி னார். அதற்குச் சம்மதித்த சபலன் திருதராட்டிரன் குருடனென்பதை யறிந்து பின்பு பெண்கொடுக்க மறுத்தான். அதையறிந்த காந்தாரிதந்தை யிடஞ்சென்று 'தந்தையே! முதலில் தாங்கள் சம்மதித்த அப்போதே நான் அவருக்கு மனைவியானேன். நானும் அவரையே கணவனெனக்கருதி விட்டேன்' என்று புகன்று அவனையே மணந்து, தன்கணவனுக்குக் கண் ணில்லாமையால் தானும் அங்ஙனமே இருத்தல் உசிதமாகுமென் றெண் ணித் தன் கண்ணையும் கட்டிக்கொண்டிருந்தார். இவரைப் பதிவிரதை யெனக் கூறத்தடையென்ன?

காரைக்காலம்மையார்:— காரைக்கால் என்னுமூரில் பிறந்து புனித வதி என்னும் திருநாமத்தையுடைய இவ்வம்மையார் பதிபக்தியிலும் ஈசு வரபக்தியிலும் மிகவும் சிறப்புடையரா யிருந்தார். ஒருநாள் அவர் கணவன்

இரண்டு மாம்பழங்களைக் கொடுத்தனுப்பியிருந்தான். அவைகளிலொன்றை மிகப்பசியோடு வந்த சிவனடியா ரொருவர்க்கு அன்னமிடுகையில் கறிய முது இல்லாமையால் அவ்வம்மையார் அவ்வடியவர்க்குப் படைத்தார். பின்பு, தன் கணவன் சாப்பிடும்பொழுது ஒருபழத்தை வைத்தார். அது மிகவும் இனிமையா யிருந்தமையின் மற்றொன்றையும் கொண்டு வருமாறு கணவன்கேட்க 'அவர் உத்தரவில்லாமல் கொடுத்து விட்டோமே, அவ்வாறு செய்தது பிசகல்லவா?' என்று பயந்து புனிதவதியார் ஒன்றுஞ் சொல்லவாயின்றி உள்ளே சென்று முன் பழங்கள் வைத்திருந்த இடத்தைத் தடவிக்கொண்டே கடவுளைத் துதித்தார். அவ்வளவில் கடவுளருளால் ஓர் பழம் கிடைத்தது. அதைத்தின்று 'இது வேறு புதியபழம்; இது ஏது?' என்று கணவன் ஐயமுற்றுக் கேட்கக் கடவுளருளால் கிடைத்தது எனச் சொல்வோமானுல் நம்பமாட்டார்; ஆகையால் அதைச்சொல்லிக் கடவுளருளிற்கோர் மாசுண்டாக்கலாகா தென்று அதைக்கூற மனமில்லாமலும் தம் கணவனிடம் உண்மையை மறைத்தல் ஏற்றதன்றென்று சொல்லாமல் விட முடியாமலும் வருந்தியோசித்துக் கடைசியில் கணவனிடம் உண்மை பேசுதலே தாம் மேற்கொண்டிருக்கும் கற்பிற்குகந்த கடமையாம் என்று உற்றதை யொளியாமலுரைத்தார்.

இவரது மகிமையை யறிந்த பரமதத்தனென்னும் அவர் கணவன் பயந்து அவரோடுடனுறைதற்கஞ்சி வேற்றூரை யடைந்து மறுமணம்புரிந்து ஓர் பெண்மகவையீன்று அவளுக்குத் தன் முதல்மனைவியாகிய புனிதவதியாரின் பெயரையே யிட்டு இல்லற நடாத்திவந்தான். புனிதவதியார் அதையறிந்து தம் உற்றாருடன் அவனிருக்குமிடத்தை யடைய, அவரது வரவைக்கண்ட கணவன் இவள் என்குலதெய்வமாவள் என் றவரடிகளில் விழுந்து வணங்கினான்.

அவன் கருத்தையறிந்த உத்தமியார் இவன் நிமித்தம் நான் தாங்கிக் கொண்டிருந்த அழகு இனி என்ன உபயோகம்? என்று கடவுளைத் துதித்துப் பேயுருவம்பெற்றார். (தொடரும்.)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## தொல்காப்பியப் பொருளதிகாரம்.

[திரிசிரபுரம், சூசையப்பர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப்புலவர் அ. சிவப்பிரகாசர் எழுதியது.]

தொல்காப்பியம், பண்டைத்தமிழ் மொழியின் பண்டை இலக்கிய வரம்புகாட்டும் இலக்கணநூல். இதுவே தமிழுக்கு முதனூல். இலக்கணம் என்பது இலக்கை அணவியது. இலக்ஷணம் என்னும் வடசொல்லின் சிதைவன்று இலக்கு, இலக்கியம், குறி, வரம்பு, எல்லை என்பன ஒருபொருட் சொற்கள். அணவுதல்—தழுவுதல், சார்தல், பொருந்துதல். எனவே இலக்கணம் என்பது மொழியின் வரம்பை-இயற்கையைத் தழுவியநூல் என்

பது திரண்டபொருள். இயல், இயற்கை, தன்மை, வழக்கு, வழங்குமுறை என்பன ஒருபொருளன.

இதன் காலம் 2500 யாண்டுகளுக்கு இப்பாலதன்று என்று மொழி நூலாராய்ச்சி, வரலாற்று நூலாராய்ச்சியில்தெளிந்த அறிஞர்கள் துணிந்து கூறுவர். அதனால், 2500 யாண்டுகளுக்கு முன்னரே தமிழ் இலக்கண வரம்பு பெற்றது என்பது அவர் கருத்தாகும்.

தொல்காப்பியத்துக்கு முதனூல் அகத்தியம் என்று சிலர் கொள்வர். அது சிதைந்தொழிந்தது என்றும் கூறுவர். சிதறுண்ட சில சூத்திரங்களென்று சிலவற்றைத் தொகுத்து 'பேரகத்தியத்திரட்டு' ஒன்று அச்சிட்டிருக்கின்றனர். அச்சூத்திரங்கள் சொன்னடையும், பொருணடையும் நோக்கும் இளஞ்சிறுரும் அவை பண்டைத் தமிழன்று என்று துணிந்து கூறுவர். பிற்காலத்தார் யாரோ சில சூத்திரஞ்செய்து தொகுத்தார் என்று கொள்வதே தெளிவு. அன்றியும், அகத்தியர் என்னும் பெயர்கொண்டு பலர் இருந்தனர் என்பது தேற்றம். தமிழ்க்கு முதனூல் தந்தார் தமிழரே யாதல் வேண்டும். அகத்தியர் தமிழராயின் அவர் பெயர் தமிழ்ப்பெயரே யாதல் ஒருதலை. ஆயின், அகத்தியர் என்னுஞ்சொல் அகம்-அத்து-இ-அர் எனப் பிளவுபடும். அகம் என்பது நாடு—உள்ளூர்—தமிழகம். அத்து—சாரியை. இ-எழுத்துப் பேறு. அர்-உயர்திணைப் பலர்பால் விகுதி. அகத்தியர்-தமிழகத்தார் - உள்ளூரார். இவரைச் சங்கத்தலைவர் என்பர். சங்கத்துக்கு உள்ளூராராய்ச் சிறந்த புலவரைத் தலைவராக நிறுவுதல் வழக்கு. அதுபோலச் சங்கம் நடைபெறுதற்கு மேற்கோள் நூலும் இன்றியமையாதது. அதுவும் அகத்தியம் ஆம். அகத்தியம் என்னும் சொல் இன்றியமையாமையை உணர்த்துஞ் சொல்லாய் இன்றும் பேச்சுவழக்கிலும் தமிழர் பேசுதலைக் காணலாம். அகத்தியர் அகஸ்தியர் என்பதும், அவர் கலசத்திற் பிறந்தார் என்பதும், அவர் பெருவிரல் (அங்குஷ்டம்) அளவின ரென்பதும், கடலைக்குடித்தார் என்பதும், விந்தியமலையை அடக்கினரென்பதும் புராணகதைகள். அக்கதைகள் நேராகப் பொருள் கொள்ள இயலா. வடக்கே இமயமலையில் சிவபெருமான் திருமணத் திருவோலக்கங் கண்டு மகிழ்ந்து, சிவபெருமான் ஏவத் தென்றிசைக்கண் வந்து மலைய மலையிற் றங்கி, செந்தமிழ்பயின்ற குறுமுனியாகிய அகத்தியரும், ஞான சம்பந்தராதியர் ஓதிய தேவாரப் பதிகங்களைத் திரட்டியருளிய அகத்தியரும் இருந்தனரன்றே !

தமிழும், ஆரியமும்:-உலகில் மக்கள் அறிவொடு தோன்றி அறிவொடு வளர்ந்து இயலெலாம் நிரம்பப்பெற்ற இயற்கைத் தனிமொழியாகிய நம் தமிழ்மொழியும், அதன் இயற்சொற் கருவிலமைந்து, இயற்பாலருந்தி வளர்ந்து, செயற்கைச் சொல்லணி யணிந்து குலாவும் பொதுமொழியாகிய ஆரியமும், இயற்கைமொழியுட் சிறந்தது தமிழெனவும், கற்பனை மொழியுட் சிறந்தது ஆரியமெனவும், பேச்சுவழக்கு மொழிகளிற் சிறந்தது

தமிழ் எனவும், செய்யுள் வழக்கு மொழிகளிற் சிறந்தது ஆரியம் எனவும், உலகோர் கொண்டாடவும்; கற்புடைமனைவியும், காதற்பரத்தையும் என்னத் தமிழர்க்குப் பயனுவன அவை இரண்டு மொழிகளுமேயாம். இனி தமிழ் ஆரியத்துக்கு மிகமிக முந்தின பழமையும் பெருமையு முடையது எனக்கூறுதலும் வேண்டுமோ? இங்ஙனம் எல்லையற்ற பழமையுடைய தமிழ் மொழிக்குத் தொல்காப்பியம் வரம்பாவ தெவ்விதம்? என்னின், தொல்காப்பியத்துக்கு முன்னும் நூல்கள் இருந்தன. அவை அகத்தியம் முதலியனவாம். அவை இறந்து பட்டமையின் தொல்காப்பியம் வேண்டுவதாயிற்று. தொல்காப்பியம் என்னும் சொல்லே அது வந்தவரலாற்றை உணர்த்தும். தொல் என்பது தொன்மை-பழமை, காப்பியம் காப்பதாகிய நூல், எனவே, தொல்காப்பியம் என்பது பழமையைக் காப்பதாகிய நூல். இறந்தகால நிலைமை, நிகழ்கால நிலைமை, எதிர்கால நிலைமைகளை உணர்த்த நூல்கள் எழுதல் இயல்பே. இறந்தகால நிலைமையைக் காத்தற்குநூல் எழுந்ததற்குப் பொருட்டு வேண்டும். அப்பொருட்டுத்தான் யாதாயிருத்தல் கூடும்? பழநூல்கள் மண்மாரியால், அன்றி மழைமாரியால், அன்றிக் கடற்பெருக்கால், அன்றிப் பகைவர் படையெழுச்சிக் கொள்ளையால், அன்றிச் சமயமாறுபாட்டுச் சள்ளையால், அழிதல் கூடும். ஆம்-ஆம். அவற்றானே பண்டைத் தமிழ்நூல்கள் அழிந்தன. தமிழ்நாட்டைக் கொடுங்கடல் கொண்டது. மக்கள் நூலொடுமாண்டனர். எஞ்சியோர், எஞ்சிய உணர்ச்சிகொண்டு நூல்களைப் புதுக்குங்கால், கொள்கை மாறுகொண்டு கலாய்த்தனர். அவற்றிற் கெல்லாம் தலைகொடுத்து நிலைத்து நின்றது இந்நூல் ஒன்றே யாதலின் இது தொல்காப்பியம் என்னத்தகுவது என்க.

தொல்காப்பியர் -இனி, இத்தொல் காப்பியத்தைத் தொல்காப்பியர் செய்தார் என்பர். தொல்காப்பியர் செய்தது தொல்காப்பியமோ அன்றி தொல்காப்பியம் செய்ததனுல் தொல்காப்பிய ராயினரோ? இவ்வையம் ஆழ்ந்து கருதி அறுதியிடத்தக்கது. தொல்காப்பியம் என்னும் சொல்லுக்கு முன்னேபொருள் கூறினேம். காப்பியம் என்னும் சொல்லினின்று காப்பியர் என்னும் சொல்வந்ததா? காப்பியரினின்று காப்பியம் வந்ததா? காப்பியத்தினின்றே காப்பியர் வந்தது என்று அறிவுடையோர் கூறுவர். அழிவழக்குச்செய்வோரே மாறுபடக்கூறுவர்; அவர், "கவிசெய்வோர் காவ்யர்; காவ்யர் காப்பியர் எனத்திரிந்தது; கவி சுக்கிரபகவான்; காவ்யர் அவன் வமிசத்தார்; சுக்கிரன் பிருகுமஹருஷியின் வமிசத்தான்; ஆதலால் காவ்யர் பிருகுவமிசத்தார்; பிருகுவமிசத்துக்கு பார்க்கவர் என்றுபெயர்; காவ்யர் பார்க்கவவமிசத்தார்; ஆதலால் தொல்காப்பியர் பார்க்கவ வமிசத்தார்; பல் காப்பியனுர், வெள்ளூர்க் காப்பியனுர், காப்பியாற்றுக் காப்பியனுர் முதலிய புலவர்களும் பார்க்கவவமிசத்தினரே; தொல் என்னும் அடைமொழி அவரை வேறு காப்பியரினின்று பிரிப்பதற்குக் கூட்டப்பட்டது" என்று, "முழுப் பூசுணிக்காயைப் பரிமாறின சோற்றில் மறைப்பார்போல" மூய

ன்று பழிபடுவர். சுக்கிராச்சாரி கவியாகலாம்; அவன் பிருகுமரபினனுக லாம்; அவன் மரபினர் பார்க்கவராகலாம்; காவ்யத்துக்கும் காப்பியத்துக் கும் உள்ளபொருத்தந்தான் விளங்கவில்லை. தமிழர் கவியைக்கவியென்றே கூறுவர்; கவிசெய்வோரைக் ' கவிஞர் ' என்பர்; காவ்யர் என்னர். 'காவ் யம்' காவியம் என்பர்; காப்பியம் என்னர். காவ்யம் என்பதன்பொருள் வேறு, காப்பியம் என்பதன் பொருள்வேறு. கவிகளால் அமைந்தது காவ் யம், காக்கும் இயல்பினையுடையது காப்பியம். காவியம் எனினும் அப் பொருளேதரும், கா பகுதியாதலால். வடசொல்லாளரே சொற்களைப் பல வாறு திரிப்பர். காப்பியம், காப்யம், காவயம், காவியம் என்பர்; வகரத் தைப் பகரமாக்குவர், பகரத்தை வகரமாக்குவர். எவ்வாறாயினும் இயற் கைத் தமிழ்ச்சொற்களை உருவந்தெரியாமற் சிதைத்தால் போதும். சொற்களின் பண்டையுருவத்தை மறைத்து வேறு பொருள் கூறுதலே அவர்களுக்குப் பொருட்டு. ஆதலின் அவர் கூற்றுக்களை ஆழ்ந்து கருதி உண்மை கண்டுகொள்ளல் தமிழர்கடமை.

அன்றியும், பிருகுவும் சுக்கிரனும் தமிழரா ? ஆயின், தமிழ நாட்டுள் எவவூரில் எக்குடியிற் பிறந்தவர் ? அவர் வரலாற்றைக்கேட்டு அறிந்து கொள்க.

**தோல்காப்பியர் பெயர்:**—தொல்காப்பியம் செய்தார தொல்காப்பி யர்; அவர் இயற்பெயர், திரணதூமாக்நி, அவரைப் பெற்றவர் சமதக்நி; என்று சிலர் கூறுவர். இப்படியும் தமிழர் இயற்பெயர்கள் (இளம்பருவத் திட்ட முதற்பெயர்கள்) கண்டதும், கேட்டதும் உண்டா? திரணம்-தூமம்- அக்நி (திரணதூமாக்நி), திரணம்-புல்; தூமம்—புகை; அக்நி=தீ. சமத்— அக்நி [சமதக்நி] சமத்—(பாலுள்ளமரத்துச) சுள்ளி; அக்நி—தீ. சுள்ளித் தீயினின்றும் புல்லிற் புகையுந்தீ பிறந்ததாம் ! விந்தையினும் விந்தை! இவ் வாறெல்லாம் கூறுவது எதற்காக ? தமிழ்க்கு முதனூல்கள் ஆரியபிராம் மணர்கள் தந்தனரென்று மருட்டவன்றோ ? மெய்யறிவுடைய தமிழர்கள் மருளுவரோ ? இதனை உய்த்து நோக்கத்தகும்.

புலத்தியரா ? தொல்காப்பியம் செய்தார் தொல்காப்பியா எனப்பட் டார். அவர் மரபினர் காப்பியக் குடியினராயினர். இதுபோலவே ' இலக கண விளக்கம் ' எழுதினோர் மரபோர் இலக்கண விளக்கப்பரம்பரையோ ரென்று கூறிக்கொள்கின்றனர். இவரது இயற்பெயர் இன்னதெனப் பண் டைத்தமிழ்நூல்களிற் காணக்கூடவில்லை. எனினும், தொல்காப்பியத் திற்கு பனம்பாரனர் கூறின, சிறப்புப்பாயிரத்தில் " தொல்காப்பியனெ னத் தன்பெயர் தோற்றி "னேன் " புலந்தொகுத்தோனே " எனக்கூறுத லால், " புலந்தொகுத்தோன் " என மற்றொருபெயரும் உண்டென்று தோன்றுகிறது. அது 'புலம்' (அறிவு) என்னும் பகுதியடியாகப் பிறந்ததென் றும், அது 'புலத்தியன்' (புலம்-அத்து-இ-அன்) ஆகலாம் என்றும் தோன்று கிறது. பண்டை மருத்துவநூல்களில் அகத்தியனார்க்குப் புலத்திய

முதன் மாணாக்கரென்றும், மருத்துவநூலை அவர்க்கே அறிவுறுத்தினரென்றும் கூறக்காணலாம். இந்தப் புலத்தியரை வடநூலார் புலஸ்தியர், பிர்மபுத்ரன், புலஸ்தியப்பிர்மா எனக் கூறுவர். வடசொல்லாளர்க்கு, தமிழ்மக்கள்பெயர், ஊர்ப்பெயர், நாட்டுப்பெயர்களை வடசொல்லில் மொழிபெயர்ப்பது வழக்கம். காய்சினவழுதி—உக்ர குமாரன்; கொல்லேற்றுப் பாண்டியன்—அரிமர்த்தன பாண்டியன்; இராவணன்—ராவண:; இராமன்—ராம:; தண்டமிழகம்—தண்டகாரண்யம்; வெண்காடு—ஸ்வேதவநம்; மறைக்காடு—வேதாரண்யம்; இடைமருதூர்—மத்யார்ஜ்ஜுனம்; முல்லைவாசல்—முல்லைத்துவார: என்பனபோல. அதுபோலவே புலத்தியன்—புலஸ்திய: எனத்திரித்து இருமொழிக்கலவையாக்கி (புல்=திருணம், அஸ்தீ=தூமாக்நி) திருணதூமாக்நி யாக்கினர் எனக் கருதலாம். எவ்வாறாயினும் தொல்காப்பியம் செய்தோர் தமிழர் என்பதிற் சிறிதும் ஐயமில்லை. (தொடரும்.)

---

## ஆரிய சித்தாந்தம்.

### (ஆசாரம்.)

(393-ம் பக்கத் தொடர்ச்சி.)

நித்தியவிதி முதலாகக் கூறிவந்தவைகளெல்லாம் ஆசாரமே. அவ்வாசாரம் சிறப்பும் பொதுவுமென இருவகைப்படும். அவற்றுள் பொதுவென்பது எல்லா வருணத்தாரானும், எத்தேசத்தாரானும் அனுஷ்டிக்கத் தக்கது. இதுவரை கூறிய ஆசாரம் பொதுவேயாம். அவற்றுள் சிறப்பும் சில கலந்து கூறப்பட்டன.

ஈண்டுச சிறப்பாகிய ஆசாரங்களையும் தனியே யெடுத்துச் சிறிது கூறவேண்டியது அவசியமேயாம். அதில் பிறருக்குப் பாதகமில்லாமலிருக்கும் பாகத்தை யீண்டெடுத்து உரைப்போம். அந்தச் சிறப்பு என்பது நான்கு வருணத்தாருக்கும் பொதுவாகாமல் ஒரு வருணத்தார் மாத்திரம் அனுஷ்டிக்கத்தக்கது. நான்கு வருணத்தார்க்கும் தனித்தனியே சிறப்பு விதிகளுண்டு.

ஆசாரமென்பது வடமொழி, தென்மொழியில் ஒழுக்கம் என்று கூறப்படும். ஒழுக்கம், நடை, என்பன ஒரு பொருளிலேயே உபயோகிக்கப்படும். திருக்குறள் அருளிய தேவனார் ஒழுக்கமுடைமை ஒன்றையே ஓர் அதிகாரமாக வகுத்துக்கொண்டு அதன் பெருமையை விரித்துக் கூறினார்.

> " ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
> முயிரினு மோம்பப் படும் "

எல்லாருக்கும் ஒழுக்கமாகிய ஆசாரம் மேன்மையைக் கொடுப்பதானபடியால் அந்த ஒழுக்கத்தை உயிரைவிட மேலானதாகக் காப்பாற்றவேண்டும் என்பது. இழிந்தவரை மேன்மைப்படுத்திச் சிறப்பளிப்பதும், உயர்ந்தோர் பெருமையை மேன்மேலும் பிரகாசிக்கச் செய்யும் இயல்புள்ளதும்

ஆதலால் அதனை உயிரினும் சிறந்ததென்று கூறினர். அன்றியும், கணத்தில் அழியும் தன்மையுள்ள உடல் ஒழிந்தபின், அது தானே அவ்வுயிர்க்கு உடலாக நின்று பூவுலகில் ஊழிகாலம் புகழை நிலைபெறச் செய்தலாம். உடலைவிட்ட ஆன்மாவுடன் குணரூபமாய்ப் பரலோகம் சென்று சிறந்த போகப்பயனை ஊட்டுதலாலும் ஒழுக்கம் உயிரினும் சிறந்ததாயிற்று. உயிர் எல்லாப் பொருள்களிலும் மேன்மையுடையதாயினும் இம்மை மறுமைப் பயனை அளிக்கும் ஆற்றல் அற்றது. ஆதலால் அவ்விரண்டையும் ஒருங்கே தரவல்ல ஒழுக்கம் மிகவும் சிறப்புடையதாயிற்று. சிறப்பு விதி கூறத் தொடங்கியவர்,

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்"

என்றார். பிராமணன் வேதத்தை மறந்துவிட்டாலும் மறுபடியும் ஓதிப் பெற்றுக்கொள்ளக்கூடும். ஆசாரத்தை இழந்துவிட்டாலோ அவன் பிராமணன் என்கிற உயர்பிறப்பை யிழந்துவிடுவான் என்பது. ஓதுதல் முதல்வருணத்தாராகிய அந்தணர்க்குச் சிறப்பிலக்கணமாம். ஏனைய நூல்களைப்போலாது குருமுகத்தான் ஓதியே கற்றுக்கொள்ளப்படுதற் சிறப்பு நோக்கி வேதம் என்று கூறப்பட்டது. வேதம் சிறந்ததாயினும் ஓதற் சிறப்பு நோக்கி அது ஸ்மிருதி, கற்பம், இதிகாசம், புராணம், ஜோதிடமாதி சாஸ்திரங்கள் எல்லாவற்றுக்கும் உபலட்சணமாம். இதனால் வேதவேதாங்கங்களையும் மற்றுமுள்ள சாஸ்திரங்களையும் கற்பதே முதல் வருணத்தார்க்குச் சிறப்பிலக்கணமாகக் கூறப்பட்டது.

வேதம் ரிக்கு, யஜுர், சாமம், அதர்வணமென நான்கு பகுதியாகக் கூறப்படுகின்றது. ரிக்குவேதம் இருபத்தொருசாகைகளுள்ளது. யஜுர் வேதம் நூற்றொரு சாகைகளுள்ளது. சாமவேதம் ஆயிரம் சாகைகளையுடையது. அதர்வணம் ஒன்பது சாகைகள் கொண்டது. அதர்வணம் என்று தனியாக ஒரு வேதம் கிடையாது. முதல் மூன்று வேதங்களினுமுள்ள மந்திரங்களை யெடுத்துத் திரட்டி அதற்கு அதர்வணமென்று பேரிட்டு வியாச முனிவர் வேதத்தை நான்காகச் செய்தார். இந்த அதர்வணம் தநுர்வேதமென்று சிறப்புப் பெயர்பெறும். இதில் அரசர்கள் யுத்தம் செய்வதற்குரிய பல மந்திரங்களடங்கியிருக்கின்றன. அபிசார ஓமங்களுக்குரிய அநேக மந்திரங்களும் உள்ளன. இதனை முறையோடு கற்றவர்கள், துரோணர், கிருபர், அசுவத்தாமர் என்கிற மூவர்களுக்குப் பின்னல் இருந்ததாகத் தெரியவரவில்லை. அந்த மந்திர இரகசியங்களும் யந்திரங்களோடு மறைந்துவிட்டனவென்றே கருதப்படுகின்றன. சிலர், அவை பரிச்சித்துக் குமாரனாகிய ஜனமேஜயன் காலம்வரைக்கு மிருந்தனவென்பர். இந்த வேதம் வட நாட்டில் அனுஷ்டிக்கப்படுகின்றது. இத்தென்னாட்டிலது அனுஷ்டானத்தில் இல்லை. வேதத்தில் ரிக்கு, யஜுர், சாமமாகிய மூன்றுமே அனுஷ்டிக்கப்படுகின்றன. ஆயினும் அதாவணவேதம் மந்திர ரூபமாய்

இவற்றுள் அடங்கியிருப்பதால் இல்லையென்று சொல்லவும் கூடாது. ஆயினும் அவ்வேத மந்திரங்களுக்குரிய தந்திர யந்திரங்களையும் பிரயோக முறையையும் அறிவார் யாருமேயில்லை.

இந்த மூன்று வேதங்களும் அற்பசுருதி, பிரபலசுருதி என்று இருவகைப்படும். சுருதி என்பது வேதம். ஏனைய நூல்களைப்போலப் படித்துணர முடியாமல் காதினுற் கேட்டே ஓதப்படுகிறபடியால் அப்பெயர் பெற்றது. சுரோத்திரேந்திரியத்தால் உணரப்படுவது என்பது பொருள். அற்ப சுருதி என்பது கன்மங்களைக் கூறுவது. இதுவே கன்மகாண்டம் என்னப்படும். பிரபல சுருதி என்பது உபநிஷத்துச் சொரூபமாய் ஞான மார்க்கத்தை உணர்த்தும். வேதம் என்பது அறிதலுக்குரிய கருவியாகிய நூல் என்று பொருள்தரும்.

இந்த வேதங்களுக்கு ஆறு அங்கங்களுண்டு. அவைமுறையே சிட்சை, வியாகரணம், நிருத்தம், ஜோதிடம், கற்பம், சந்தோபிசிதி என்பனவாம். வேதோச்சாரண முறையை விளக்குவது சிட்சையாம்; வேதத்திலுள்ள பதங்களுக்கு இலட்சணங் கூறுவது வியாகரணமாம்; வேதத்தின் விவரணங்களைக் கூறுவது நிருத்தமாம். ஜோதிஷம் என்பது வைதிகங்களுக்குரிய காலத்தை யறிவிப்பது. காலமாவது இலக்கினம், திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் என்பனவாம். கற்பம் என்பது வைதிக கர்மங்களைப் பிரயோகிக்கு முறையைக் கூறுவது. அவை ஆசுவலாயனம், போதாயனம் ஆபஸ்தம்பம் என்கிற கற்பசூத்திரங்களேயாம். சந்தோபிசிதி என்பது உக்தை முதலிய சந்தோபேதங்களுக்கு அக்ஷர சங்கியை கூறுவது. இவற்றை யோதியுணராக்கால் வேதங்களை யோதுதலும், அவற்றின் பொருளை அறிதலும், அந்த வேதவிதிப்படி நடத்தலும் கூடாவாம். இவற்றை யோதியுணராதவர் வேதத்துக்குச் சரியான பொருளையும் உணரமாட்டார்கள். இவற்றை முறைமையாக ஓதியுணரவேண்டும். முறைமையாக ஓதுதலாவது நன்குபுணர்ந்த குருமுகத்தால் சந்தேக விபரீதங்களறத் தெரிந்துகொள்வது. இவ்வாறு வேதமோதுவதற்குத் துவிஜர்களுக்கே அதிகாரமுண்டு. பிராமணர்களே முற்றும் ஓதவேண்டியவர்கள். மற்றைய துவிஜர்களோ தங்களுக்கென்று ஏற்பட்ட பாகத்தை ஓதினுற் போதும்.

வேதமோதுவதற்கு நிர்ப்பந்தமான சில விதிகளுண்டு. முதலில் உபநயன தீட்சை பெற்றுக்கொள்ளவேண்டும். அது பெற்றால்தான் அவன் துவிஜன் என்னப்படுவான். பிறகு வேதமோதவேண்டும் இந்த நிலைக்குப் பிரமசரியம் என்று பேர். இதனையே பிரமசரியாசிரமமென்றும், முதலாம் ஆசிரமம் என்றும் கூறுவது இவ்வாசிரமத்தை அடைவதற்கு ஐந்து வயது ஏழு வயதுகளே பிராமணர்களுக்குக் குறிக்கப்பட்டுள்ளன. தன் தகப்பனுரிடத்திலாவது நன்குய்க் கற்றுணர்ந்த பிற ஆசிரியரிடத்திலாவது ஓதலாம். உபநயனமானவுடனே, வேறு ஆசிரியரைத் தேடி அவரிடம் சென்று பயிலவேண்டும். நிர்ப்பந்தம் மிகவுமுண்டு.

இக்காலத்தில் பிட்சையெடுத்தே புசிக்கவேண்டும். அதுவும் தனக்கு மட்டும் போதுமான உணவையே பெற்றுவரவேண்டும். ஆசிரியர் கட்டளையிருந்தால் அவருக்காகவும் பிட்சையெடுக்கலாம். எடுத்த பிட்சையைக் கொண்டுவந்து குருவுக்குக் காட்டவேண்டும். அவர் புசி என்று உத்தரவளித்தபின் புசிக்கவேண்டும். பகலில் ஒருவேளை பிட்சையெடுப்பதே சிறப்பானது. பகலில் பிரமசாரிகளுக்கும், யதிகளுக்கும் அவசியம் பிட்சையிடவேண்டுமென்பது விதிஆதலால் எல்லாப் பிராமணர்களும் பிட்சையிடவேண்டுமென்பது விதி. ஆதலால் எல்லாப் பிராம்மணர்களும் பிட்சையிட்டேதீரவேண்டும். இரவில் பிரமசாரி பிட்சையெடுத்தால் அதற்குத் தரும பிட்சையென்று பேர். அந்தப் பிரமசாரி தரும பிட்சையென்றே கேட்கவேண்டும். பகலில் அப்படி அல்ல. "பவதி பிக்ஷாந்தேஹி" என்று அதிகாரத்துடன் கேட்கலாம். சந்நியாசிகள் ஒருவேளை பிட்சையெடுத்துப் புசிக்கலாமே தவிர இரவில் பிட்சைக்கு வரக்கூடாது. வேதமோதுகிற பிரமசாரி வேண்டிய அளவு புசிக்கலாமென்றும், வேண்டியபோது புசிக்கலாமென்றும் விதி உளதாதலால் அவர்கள் இரவிலும் பிட்சையெடுக்கலாம். பிரமசாரிக்குக் குருபணிவிடையே முக்கியம். பணிவிடையாவது அக்கினிஹோத்திரம் முதலிய அக்கினி காரியங்களுக்கு வேண்டிய சமித்துக்கள் தர்ப்பைகள் கொண்டுவந்து வைத்தலும், வைதிககிருத்தியங்களுக்கு உடனிருந்து உதவி செய்தலும், அவர் ஏவின வேறு வேலைகளைச் செய்தலுமாம். இவன் வஸ்திரத்தைப் பாதம்வரையிலும் தாழவிட்டுக் கட்டிக்கொள்ளக்கூடாது. முழங்கால் வரைக்குந்தான் கட்டலாம். அங்கவஸ்திரம் தரிக்கவேண்டிய அவசியமில்லை. சந்தனம் பூசிக்கொள்ளக்கூடாது. புஷ்பங்களைத் தரித்துக்கொள்ளக்கூடாது. வெற்றிலைபாக்குத் தின்னக்கூடாது. வேடிக்கை விநோதங்களைப் பார்க்கக்கூடாது. விருந்து பிராமண போஜனமாகிய சமாராதனை முதலியவைகளிற் புசிக்கக்கூடாது. கல்யாண வீடுகளில் புசிப்பதும் தட்சிணை வாங்குவதும் கூடா. நாடகம் பார்ப்பதும், விகடம் கேட்பதும் கூடா. பரிகாசப் பேச்சுக்கள் பேசக்கூடாது. பெண்களிருக்கிற இடத்துக்குப் போகக்கூடாது. தனித்துப் பெண்களிடத்தில் பேசக்கூடாது. அவர்களுடன் பரிகாசம் செய்யக்கூடாது. அதிகாலையில் எழுந்திருந்து தந்தசுத்தி முதலிய செய்துகொண்டு ஸ்நானம் செய்து ஸந்தியாவந்தன ஜபங்களை முடித்துக்கொண்டு சமிதாதானம் என்கிற அக்கினி காரியத்தைச் சிரத்தையுடன் செய்யவேண்டும்.

அதன்பிறகு வேதாத்தியயனம் செய்யவேண்டும். ஆசிரியர் சொல்லிக்கொடுக்கிறவரையிலும் ஓதி, அவர் போ என்று சொன்னபின், மாத்யான்ஹிகங்களை முடித்துவிட்டுப் பிட்சையெடுக்கச் செல்லவேண்டும். புசித்தபின் குருவின் உத்தரவின்மேல் வேதம் ஓதவேண்டும். வேதம் ஓதுகிற பொழுதே இதர சாஸ்திரங்களையும் கற்கவேண்டும். காலமறிந்து குரு உத்தரவு தரும்போது காவியாதிகளையும் இதிகாச புராணங்களையும் கற்கவேண்

டும். பிறகு ஆறு அங்கங்களையும் பொருளோடு ஓதி உணரவேண்டும். வேத வேதாங்கங்களை ஓதிய பின்னரே காவியாதிகளைக் கற்கவேண்டு மென்பதும் உண்டு.

இவ்வாறு நாலு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் ஓத நாற்பத் தெட்டு வயது வரையும் செல்லும். "அறுநான்கிரட்டி யிளமை நல்யாண், டாறினிற்கழிப்பர் அறநவில்கொள்கை, மூன்றுவகைக் குறித்தமுத்தீச் செல்வர்" என்று தமிழ்மொழிப் பெரியார் அந்தணரைச் சிறப்பித்துக் கூறினர். எல்லா வேதங்களையும் ஓதாவிட்டாலும் தன் மரபுக்குரிய வேத த்தை மாத்திரமாவது ஓதவேண்டும். இதனாலேதான் ரிக்வேதி, யஜுர் வேதி, சாமவேதி என்று அந்தணர் மூன்று பகுதிப்பட்டவராயினர்.

பிறகு ஸமாவர்த்தனகிரியை செய்து பிரமசரிய விரதத்தை முடிக்க வேண்டும். செய்து முடித்தபின் தாம்பூலாதிகளும் சந்தன பரிமளங் களும் தரித்து, வெண்மையான அழகிய வஸ்திர முடுத்துக்கொண்டு காலங்கழிக்கலாம். ஸ்திரீ சம்பந்தம்மட்டும் கூடாது. இந்த நிலைக்கு ஸ்நாதகதர்மம் என்று பேர். இதையுடையவன் ஸ்நாதகப் பிராமணன் என் னப்படுவான். இவ்வாறின்றிக் குருபணிவிடை செய்துகொண்டு அவரை விட்டு அகலாமலிருக்கலாம். இவன் பிரமசரியத்தை முடிக்கும் கிரியை செய்யவேண்டியதில்லை. இவன் பிரமசாரியே. இவனை நைஷ்டிகப் பிரம சாரி என்று கூறுவார்கள்.

இந்த முதல் ஆச்சிரமத்திலிருந்தே வானப்பிரஸ்த சந்நியாச ஆச்ரமங் களை யடையலாம். ஆயினும் அந்தத் தர்மங்கள் நிறைவேறுவது கஷ்டம். ஆதலால் முறைப்படியே செல்வதுதான் சரியானது. அதாவது பிரமசரி யத்தை முடித்தவுடனே கிரகஸ்தாசிரமம், பின் வானப்பிரஸ்தம், அதன் பின் சந்நியாசம் இவற்றை முறையே அடையவேண்டும். மன அடக்கமும் இந்திரிய அடக்கமும் உடையவன் பிரமசரியததிலேயே யிருந்துவிடலாம்.

அது இருப்பதற்கு மிகவும் அருமையானது. தவறுதல் அநேகமாய் நேரும். நேரிடும் பல பல இடையூறுகளை வென்று அவ்வாசிரமத்தைக் காத்துக்கொள்வது உலகமாயா சக்கிரத்துக்குள் சிக்கி உழலும் எல்லாருக் கும் இயலாது பூர்வபுண்யமுடையார்க்கு அகத்துறவுண்டாகும். அகத் துறவே சந்நியாசமாம். பிரமசரியமும் அதை ஒத்ததுதான். இவ்வாசிர மங்களில் நின்று சிறிது தவறினல் நித்திய நரகவேதனை நேரும். ஆதலால் முன்னோர் வகுத்த சோபான மார்க்கப்படி முறையாகச் செல்வதுதான் நன்று. சோபானமென்பது படி அம்மார்க்கமாவது பிரமசரியம், கிரகஸ் தம், வானப்பிரஸ்தம், சன்னியாசமென்பனவாம். இவை நான்கும் மோட் சத்துக்கு சோபானமார்க்கமெனப்படும்.

இக்கஷ்டங்களை நோக்கியே "இல்லறமல்லது நல்லறமன்று" என்று அன்னையாரும், "அறனெனப்பட்டதே யில்வாழ்க்கையஃதும், பிறன்பழிப் பதில்லாயினன்று" எனப் பொய்யாமொழியாருங் கிருகஸ்த தர்மமாகிய இல்லறதர்மத்தைப் புகழ்ந்து கூறினார்கள். இல்லறம் முதன்மூன்று வரு ணத்தாரும் அனுஷ்டிக்கத்தக்கதென்று நூல்கள் விதித்தன. முதல் வரு ணத்தார்க்கு நாலு ஆசிரமங்களும் உரியன. நாலாம் வருணத்தாருக்குக் கிருகஸ்தாச்ரமமட்டுமே வேதம் வகுத்தது. (தொடரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## பகவத்கீதை வசனம்.

(389-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஏனெனின், இனிவரும் 18-வது அத்தியாயத்தில் 14-15-வது சுலோகங்களால், அதிஷ்டானம், கருத்தா, கரணம், சேஷ்டை, தெய்வம் என்னும் ஐந்தன்கண் ணெல்லாக் கருமங்களின் காரணத்தன்மை கூறப்பெறுதலினுலென் றறிந்துகொள்க. மேற்கூறிய ஐந்தன் விசேட அருத்தத்தை அச்சுலோக அருத்த நிருபணத்திற் கூறுவாம். இவ்விதமான கிரமத்தைப் பின்வரும் வாசிகதவத்திலும், மாநததவத்திலும் கண்டுகொள்ள வேண்டும். யான் பிரஹ்மரூபன் என்னும் பிரஞ்ஞை யாவனுக் குரியதோ அவன் பிராஞ்ஞனென்னும் அறிஞனுவான். இருபிறப்பாளரினும் அறிஞனை ஸ்ரீ பகவான் தனியே கூறியருளியது எதற்காக வென்றால்:—முன்னநேகம் பிறப்புகளில் செய்த புண்ணியத்தால் கிடைத்த ஈசுரரது திருவருளாலே பிரஹ்மநிஷ்டைத்தன்மை வடிவ அறிவுற்றதன்மை சூத்திராதியரிடத்தும் சம்பவித்தல் கூடும். விதுரர் தரும வியாதர் என்பவராதியரிடத்தில் ஞானமிருந்தது ஸ்ரீ பாரதாதிகளில் வெளிப்படையேயாம். பெண்களாயினும் வணிகராயினும் சூத்திரராயினும் எம்மைத் தரிசிக்கிறவர்கள் பரமகதியை யடைவார்களென்று ஸ்ரீ பகவானே முன்னர் அனுக்கிரகித்தருளி யுள்ளார். இத்தகைய அறிஞர்களாகிய சூத்திராதியரும் பூசிக்கயோக்கியரேயாவர். இவ்வர்த்தத்தைத் தெரிவிக்கும் பொருட்டே இருபிறப்பாளரினும் அறிஞரை வேருகக் கூறியருளியதாம்.

ஹே அர்ச்சுன ! துயரைத்தராததும், உண்மையும், பிரியமும், ஹிதமும் ஆகியவாக்கியம், வேதமோதல் என்பனயாவும் வாக்குமயத்தவமாம்.

ஹே கௌந்தேய ! கொடூரத்தைச் செய்யாததும் அதாவது கேட்கப்பட்டயாவருக்குமே துயரமீயாததும், மெய்யாயதும், அதாவது பிரமாணமூலத்தை யுடையதும் (வேறுபிரமாணங்களாற் பாதிக்கப்படாத பொருளை யுடையதும்), பிரியமும் அதாவதுமொழியும் பொழுதே கேட்பவனுடைய செவிக்கு இன்பந்தருவதும், ஹிதமும் அதாவது மேல்பலந்தரும்போதும் கேட்டவனுக் கின்பமேதருவதும் என்கிற நான்கு சிறப்புகளோடு கூடியதாகவே கூறும் வசனமிருந்தால் அது வாக்குத்தவமாம்; இவற்றிற் சிறிது குறைந்தாலும் வாக்குத் தவக்குறைவாம். "சாந்தனு யாதியென் மைந்த நின் றனது, போந்த வேதந்தனைப் புகழ்பெறப்படித்தி, யாந்துணையோகம் அரிதுபயிலுதி, வேந்தரும் புகழ வீற்றிருந்திடுவாய்" என்பதில் இயம்பிய நான்கு விசேஷணங்களுமே யமைந்துள்ளனவாம். இதனுல் இன்சொன் மொழிதலே பெரிய வாசிக தவமாம் நியமமாக இருந்து வேத அத்தியயனஞ் செய்தல் சிவராமாதி நாமங்களைச் செபித்தல் வாக்குத்தவமாம்.

ஹே பார்த்த ! மனத்தின் றெளிவு, சௌமியத்தகைமை, மௌனம், உளத்தின் நிக்கிரகம், மனத்தூய்மை என்பனயாவும் மாநசதவமாம்.

ஹே பற்குன ! விடயசிந்தை வியாகூலமற்றிருத்தல் வடிவமனத்தினது சுவஸ்தத்தன்மையே மனப்பிரசாதமாம்; எல்லாருக்கும் ஹிதத்தையே விரும்பலும், சாஸ்திரம் தள்ளியதை நினையாமையும் ஆகிய நன்மனத் தன்மையே சௌமியத் தன்மையாம். ஒருமையுடன் ஆன்மாவைச் சிந்தித்தல் வடிவநிதித்தியாசனமென்னும் முனித்தன்மையே மௌனமாம், அல்லது வாக்கை யடக்குவதற்குக் காரணமாகிய மனத்தின் அடக்கமே மௌனமாம். மனத்தினதுஎல்லா எண்ணங்களின் விசேடநிக்கிரக மென்னும் நிருவிகற்பசமாதியே ஆத்மவிநிக்கிரகமாம் = மனத்தை நன்கடக்கலாம். இருதயத்திற் காமக்குரோத லோபாதிரூப மலநீக்கமாகிய நற்றூய்மையே ஹிருதய சுத்தியாம்; அவ்விருதயத்தில் மீண்டும் காமாதி யசுத்தியுண்டாகாமையே தூய்மையில் மேன்மையாம். அயலாரோடு விவகாரகாலத்தில் கபடமுதலியவை யில்லாதிருத்தல் மனத்தூய்மையாம். இவையாவுமே மானததவமாம்.

[ஆண்டு அருளிய 3 சுலோகங்களாலே காயிகாதி முத்தவங்கள் கூறியருளப் பெற்றன ; இனி முத்தவத்தின் சாத்துவிகாதி முப்பேதத்தை ஸ்ரீ பகவான் 3 சுலோகங்களாற் கூறியருளத் தொடங்கல்.]

ஹே அர்ச்சுன ! பல ஆசையில்லாத ஒருமையோடு கூடிய மனத்தையுடையவர் அதி சிரத்தையாற்செய்த முன்மொழிந்த முத்தவங்களைப் பெரியவர் சாத்விக தவமென்பர்.

ஹே பார்த்த ! பலேச்சையற்ற அதாவது காரியசித்தி அசித்திகளில் மகிழ்ச்சிவாட்ட விகாரமற்ற சமாகித சித்தமுடைய அதிகாரிகளாகிய நிட்காமர்களால் அப்பிராமாண்ய சங்கையாகிய களங்கமில்லாமல் உளதாம் ஆஸ்திக்கிய புத்திரூப சிரத்தையானே அனுஷ்டிக்கப் பெற்ற முன்மொழிந்த காயிகாதி முத்தவத்தை அருமறையறிந்த ஆன்றோர் சாத்வீகதவமென்பர்.

ஹே அர்ச்சுன ! மீண்டும் சற்காரமான பூஜையின் பொருட்டு இடம்பத்தானே செய்யப்பட்ட தவத்தையான்றோர் இராஜசமென்பர்; அத்தவமிவ்வுலகிலேயே பயன்றருவதாம் சலமும் அத்துருவமுமாம்.

ஹே பாண்டவ ! இத்தவத்தையுடைய பிராஹ்மணர் மிகவும் மேன்மையர் என அவிவேகிகள் செய்யுந்துதி சற்கார மெனப்படும்; அவிவேகிகள் செய்யும் எழுதன் முதலியவை மானமெனப்படும்; அவிவேகிகள் செய்யும் திருவடியபிடேகம் அர்ச்சனை தக்ஷிணைசெய்தல் பூசையாம். இவற்றின் பொருட்டுக் கேவலம் இடம்பத்தானே செய்யப்படுவதும், ஆஸ்திக்யபுத்திரூபசிரத்தையினனே செய்யப்படாததும், ஆகியதவத்தை நூலுணர் பெரியோர் இராஜசதவமென்பர். அத்தவம் கேவலம் இகலோக பலத்தையே யடைவிக்கு மல்லது பரலோகபலத்தை யடைவியாதாம். அது சலமாம் = மிக அற்பகால மிருக்கும் பலகாரணமாம். அது அத்துருவமாம் = பலகாரணத் தன்மையின் நியம மின்மையதாம். அத்தவத்தைச் செய்பவர்க்

கெல்லாம் நியமமாகச் சற்காராதி கிடைப்பது மில்லை; எவனேனும் ஒருவனுக்கே கிடைக்குமாதலின், இகலோக பலத்திலும் அது நியமமாக ஹேது வாகாதாம்.

ஹே கௌந்தேய! எத்தவமானது மிகப் பிடிவாதத்துடன் இவ்விந்திரியக் கூட்டத்தைத் துன்புறுத்திச் செய்யப்படுவதாமோ, அயற்பிராணியை விநாசஞ்செய்யும் பொருட்டுச் செய்யப்படுமோ அத்தவத்தையான்றோர் தாமதமென்பர்.

ஹே அர்ச்சுன! அவிவேகத்தின் அதிசயத்தானே, செய்யப்பட்ட துராக்கிரகத்தால் தேக இந்திரியாதி சங்காதத்தைப் பீடைசெய்து எத்தவஞ் செய்யப்பெறுமோ, வேறொரு பிராணியை விநாசஞ்செய்யும் பொருட்டு எத்தவஞ் செய்யப்படுமோ, அத்தவத்தைச் சாஸ்திரமுணர்ந்த பெரியோர் தாமதமென்பர்.

[மேல் அருளிய மூன்று சுலோகங்களானே முறையாகத் தாமதாதி முத்தவம் மொழிந்தருளப் பெற்றது. இப்போது அருளுஞ் சுலோகங்கள் மூன்றும் முறையாகத் தானத்தின் சாத்விகாதி முப்பேதத்தை ஸ்ரீபகவான் திருவாய் மலர்ந்தருளல்.]

ஹே அர்ச்சுன! இத்தானம் அவசியமியற்றத் தக்கதாம்; இவ்வாறு துணிந்து எத்தானம் உத்தம க்ஷேத்திரத்திலும், உத்தமகாலத்திலும், உபகாரியாகாத பாத்திரத்திற்குச் செய்யப் பெறுமோ அது சாத்விகமாம்.

சுருதிமிருதி வடிவசாஸ்திரம் இத்தானத்தை எனக்கு விதித்துளதாதலின், அதனாணையின் வயத்தான் இது என்னால் இன்றியமையாது இயற்றத் தக்கதாம் என்று நிச்சயித்து, அத்தானபல ஆசையை யகற்றிப்பொன் முதலியவற்றினது தானத்தை உத்தமமான இடத்தில் மேலான காலத்தில் அநுபகாரியான பாத்திரத்தில் இயற்றுவது சாத்துவிகதான மெனப்பெரியோர் கூறுவர். குருக்ஷேத்திராதி தீர்த்தபூமிகள் உத்தம தேயங்களாகும். சூரியகிரகணாதிகாலம் உத்தமகாலமாம். யாவன்றனக்கு ஒருகாலத்தினும் யாதொரு உபகாரமும் செய்யானோ அவன் அநுபகாரி யெனப்படுவன். வித்தை தவமிரண்டோடுங் கூடியவன் பாத்திரனாவன். அல்லது தன்னையுந்தாதாவையும் காப்பவன் பாத்திரனாவன். எம்மறையவன் வித்தைதவங்களோடு கூடித்தன்னைக் காப்பதிலும் தாதாவைக் காப்பதிலும் சாமர்த்தியமுடையவனாவனோ அவனே தாதாவின்றனதியை யேற்றுக் கொள்ளலாம்; அவ்வாறாகாதவன் தானம் வாங்கலாகாது என்று சாஸ்திரமும் விதிக்கின்றது. இத்தகைய அநுபகாரிக்கு உத்தம தேசகாலத்தில் பயனை விரும்பாமல் சாஸ்திர விதிப்பிரகாரம் கொடுக்கும் பொன் முதலியவற்றின்றானம் சாத்விகதானமாம்.

(தொடரும்.) சீடன்.

---

# சந்தாநேயர்களுக்கு அறிவிப்பு.

## 11-வது ஆண்டு.

நேயர்களே! அடுத்த ஆடிமீ நமது ஆனந்தபோதினிக்கு 11-வது வருடம் பிறக்கப்போகிறது. முன் வருடங்களில் நடத்தியபடியே அடுத்த ஆனிமீ சஞ்சிகையை வி-பி-யிலனுப்பி 11-வது வருட சந்தாவை வசூலிக்கத் தீர்மானித்திருக்கிறோம்.

முன்பணமனுப்புவோர் 1925ஞு ஜூன்மீ 15உக்குள் நமக்கு வந்து சேரும்படி யனுப்பக் கோருகிறோம். வி-பி-யில் சஞ்சிகை பெற்றுக் கொள்வதால் 3 அணு அதிகச் செலவும் வீண் ஆலசியமும் நேர்கிறதென்பது கவனிக்கத்தக்க விஷயம்.

அடுத்த வருடம் சஞ்சிகை வேண்டாதோர் 15-6-1925-க்குள் நமக்குத் தெரிவித்துவிட்டால் ஆனிமீ சஞ்சிகையை வி-பி-யிலனுப்பாமல் சாதாரணமாகவே யனுப்பிவிடுவோம். அப்படிச் செய்யாது பேசாமலிருந்துவிட்டு, [illegible] நமக்கு நஷ்டமுண்டாகவிட்டு, "11-ம் வருட சந்தா[illegible] அனுப்பியிருக்க எனக்குக் கடைசிச் சஞ்சிகையை யனுப்பவில்லை" என்று குறை கூறுவதில் பயனில்லை. இதை நன்ருய்க் கவனிக்கக் கோருகிறோம்.

முன்பணமனுப்புவோரும் சஞ்சிகையை நிறுத்திவிட அறிவிப்போரும் மறவாமல் தங்கள் சந்தா நம்பரை யறிவிக்கவேண்டும். இதுகாறும் அதைக் குறித்துவைத்துக்கொள்ளாதவர்கள் வைகாசிமீ வரும் சஞ்சிகையின் மேல் உறையைக் கிழித்தெறியுமுன்பே விலாசத்தில் இருக்கும் சந்தா நம்பரை (1190 என்ற ரிஜிஸ்டர் நம்பர் அல்ல) மறவாமல் குறித்துக்கொண்டு அறிவிக்க வேண்டுகிறோம்.

### இன்னொரு விசேடம்:

சந்தா நேயர்களில் பலர் சஞ்சிகையை மாதம் இருமுறையாக்கவேண்டுமென்றும், அல்லது பக்கங்களையேனும் அதிகப்படுத்தவேண்டும் என்றும் அதற்காகத் தங்கள் சந்தாத் தொகையை யதிகப்படுத்தி யனுப்பச் சித்தமாயிருப்பதாகவும் வரைகிருர்கள்.

நம் நாட்டார்க்குப் பத்திரிகைகளில் இன்னும் போதுமான அபிமானம் உண்டாகவில்லையாதலின் மேற்கண்ட நண்பரைப்போல் எல்லாரும் நடந்துகொள்வார்களென்று எதிர்பார்க்கக் கூடவில்லை. நாடகம், பயாஸ்கோப் காட்சி முதலியவைகளுக்காக ஒரு வாரத்தில் செலவழிக்கும் பணத்தைச் சஞ்சிகைக்காக வருடமொருமுறை செலவழிக்கப் பின்னிடைகிருர்கள். இருக்கும் சந்தாதாரரில் அனேகர் வருடாரம்பத்தில் வி-பி-யை வாபீஸ் செய்துவிட்டுப் பின்னுல் 1 ரூபாயனுப்பி மறுபடி சேர்கிருர்கள். இவ்வாறு ஆயிரம்பேர் வாபீஸ் செய்தாலும் சஞ்சிகை 1-க்கு 3 அணு வீதம் ரூபா 187-8-0 நமக்கு நஷ்டமாகிறது.

ஆதலின் சஞ்சிகையை யாதரிக்கும் சந்தா நேயர்கள் நமக்குச் சந்தாத் தொகையை உயர்த்தியளிக்காவிடினும் இத்தகைய வீண் நஷ்டத்தை யளிக்காமல், ஒவ்வொருவரும் முன்பணம் செலுத்திச் சஞ்சிகையைப் பெற்றுக்கொள்ளவும், ஒவ்வொருவர் ஒவ்வொரு புது சந்தாதாரரைச் சிபாரிசு செய்யவும் முயற்சியெடுத்துக்கொள்ளுமாறு வேண்டிக்கொள்கிறோம். இவ் விஷயத்தில் நமக்குச் சற்றேறக்குறைய திருப்தியுண்டாகுமாறு நேயர்கள் மனம் வைத்துச் செய்வார்களாயின், நாம் இந்தச் சந்தாவுக்கே சஞ்சிகையின் பக்கங்களை (11-ம் வருடத்திலிருந்தே) அதிகப்படுத்தச் சித்தமா

யிருக்கிறோம். சந்தாதாரர்கள் நமக்குக் கஷ்டத்தை யுண்டாக்காதிருந்தால் அதுவே நமக்குப் பரிசளித்தமாதிரியாகும்.

## இலங்கை சந்தா நேயர்களுக்கு அறிக்கை

*நமது ஆனந்தபோதினியில் இலங்கை சந்தா நேயர்கள், நாளது 11-ம ஆண்டின் ஆனந்தபோதினி சந்தாவை மணிஆர்டர் மூலமாக அனுப்பும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். இலங்கை போஸ்டல் ஆர்டர் இங்கு மாறுகிற தில்லை.* பத்திராதிபர்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(398 ம் பக்கத் தொடர்ச்சி.)

*ஆனந்தலிங் சரியாய் ஒன்பது மணிக்கு லாயர் வீட்டின் எதிரில் வந்து நின்றான். அவன் எள்ளளவு விஷயத்திலாவது அசட்டையாயிராமல் பூரண ஜாக்கிரதையோடு வந்திருக்கிறான். நாம் முன் கூறியதுபோல் லாயர் தன்னைக் கொன்றுவிடப் பூரணமான ஏற்பாடு செய்து வைத்திருக்கிறான் என்று அவனுக்குத் தெரியும். இறந்துபோன அச்சுதன் ஜேபியிலிருந்த சில வஸ்துக்கள் அச்சமயம் அவன் ஜேபியில் இருக்கின்றன.*

*லாயர் வீட்டின் தெருக்கதவருகில் நின்றதும் தன் ஜேபியிலிருந்த சாவிகளில் ஒரு சாவியை யெடுத்து அதனால் கதவைத் திறந்து உள்ளே சென்றான். அங்கிருந்த சிறு கூடத்தைக் கடந்ததே அங்கொரு கதவிருந்தது. அதின் சந்தில் உள்ளிருக்கும் தீபவொளி தெரிந்தது எதிரிக்கு வியப்பும் பிரமையும் கலவரமும் உண்டாகத்தக்க செய்கைகளைச் செய்வதற்கு எள்ளளவு சமயம் நேர்ந்தாலும் ஆனந்தலிங் அதை விருதாவாய் விட்டுவிடுவதில்லை. ஆதலால் தன்னிடமிருந்த இன்னொரு சாவியால் அக்கதவையும் திறந்துகொண்டு உள்ளே யுட்கார்ந்திருக்கும் இலாயர் முன் சென்று நின்றான்.*

*இவ்வாறு பூட்டிப்பட்டிருந்த இரண்டு கதவுகளையும் திறக்கும்படி தட்டாமலே திடீலென்று தன் முன்வந்து நிற்கும் ஆளைக் கண்டதே லாயர் திடுக்கிட்டு, "எப்படி யுள்ளே வந்தாய?" என்றான்.*

**மாய அச்சுதன்:**—*"ஏன் கவனமில்லையோ; ஆபிஸுக்கு வர தங்களிடம் இருப்பதுபோல் என்னிடமும் இரண்டு சாவிகளில்லையா. அவைகளை நீர் வாங்கிக்கொள்ளவில்லையே. என்னிடந்தானே இருக்கின்றன" வென்றான்.*

**லாயர்:**—*"ஆ! ஆம, ஆம். மறந்துவிட்டேன். இப்போது நீ என்னிடம் வந்த வேலை யென்ன?" வென்றான்*

**மா-அ:**—*மறந்துவிட்டீரோ. நீரல்லவோ இங்கு இந்த வேளைக்கு நாம் சந்திக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்தது?*

**லாயர்:**—*நேற்று உன்னை யென் வீட்டிற்கு வரும்படி நானு ஏற்பாடு செய்தேன்?*

**மா-அ:**—*இல்லை. நானே வந்தேன்.*

**லாயர்:**—*வந்து சில மிரட்டும் வார்த்தைகளைக் கூறினாய்.*

**மா அ:**—*நான் கூறியவற்றை. நீர் எப்படி வேண்டுமாயினும் வைத்துக் கொள்ளலாம்.*

**லாயர்:**—*என்னுடைய இரகசியங்களில் அனேகம் உனக்குத் தெரிந்திருப்பதாய்க் கூறினாயல்லவா?*

**மா-அ:**—*ஆம். கூறினேன்.*

**லாயர்:**—*அவற்றை வெளியிடாதிருக்கக் கூலி வேண்டுமென்கிறாயல்லவா?*

மா-அ:—நீரே யவற்றை வெளியிடாதிருக்க எனக்குப் பணம் தருவதாய்க் கூறினீர்.

லாயர்:—அப்படியே யிருக்கட்டும். ஆனால் அந்த இரகசியங்களின் விசேஷத்தன்மைக்குத் தக்கபடிதான் கொடுக்கப்படும்.

மா-அ:—சரி அப்படியே யிருக்கட்டும். நான் விவரமாய்க் கூறுவது அனுவசியம்; எனக்கு எவ்வளவு விஷயங்கள் தெரிந்திருக்குமென்பதை நீர் நன்கறிவீர்.

லாயர்:—அப்படியானால் எவ்வளவு தருகிறேனென்று என்னையே யுரைக்கச் சொல்லுகிறாயோ ?

மா-அ:—ஆம்.

லாயர்:—நான் சீக்கிரம் கூறுவேன்; முப்பது ரூபாய் தருவேன்.

இதைக் கேட்ட மாய அச்சுதன் கலகலவென்று நகைத்து பேஷ்! என்றான்.

லாயர்:-"அது போதாதோ? அப்படியாயின் உனக்குத் தெரிந்திருக்கும் என் இரகசியங்களைக் கூறு. ஏன் நிற்கிறாய்; அந்த நாற்காலியில் உட்கார்" என்று குறிப்பாய் ஒரு நாற்காலியைக் கையால் சுட்டிக் காட்டினான்.

மா-அ:—வேண்டாம். நான் நின்றுகொண்டே யிருப்பேன்.

லாயர்:—"நீ உட்காரவேண்டும்" என்றான்.

அதன்மேல் மாய அச்சுதன் "அப்படியானால் இதோ இந்த நாற்காலியில் உட்காருகிறேன்" என்று லாயர் காட்டிய நாற்காலியை விட்டுவிட்டு வேறொரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டான்.

லாயர்:—"சரி. உனக்குத் தெரிந்தவற்றை யெல்லாம் கூறு பார்ப்போம்" என்றான்.

மா-அ:—கள்ளமரணசாசனம் எழுதப்பட்ட சங்கதி முழுமையும் எனக்குத் தெரியும்.

லாயர்:—யாருடைய மரணசாசனம் ?

மா-அ:-அம்பாலிகையின் தந்தை இலட்சுமணப்பிள்ளையின் மரணசாசனம்.

லாயர்:—கள்ளமரணசாசனம் ஏற்பட்டதாய் நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். ஆயினும் விவகாரத்திற்கு அப்படி யிருப்பதாகவே ஒப்புக்கொள்வோம். பிறகு இன்னுமென்ன ?

மா-அ:—அம்பாலிகையைப்பற்றிய சதியாலோசனை முழுமையும் நான் அறிவேன்.

லாயர்:—என்ன சதியாலோசனை ?

மா-அ:—வீணாய் ஒன்றுமறியாதவர்போல் என்னிடம் அபிநயம் செய்வதில் பயனில்லை. எல்லா விஷயமும் எனக்குத் தெரியும்.

லாயர்:—நான் அபிநயம் செய்வதாகவே யிருக்கட்டும். நீ யாவும் விபரமாய்க் கூறியே தீரவேண்டும்.

மா-அ:—அம்பாலிகை முன்னே மூலிகையால் சவத்தைப்போல் செய்யப்பட்டுச் சுடலையில் புதைக்கப்பட்டதும், பிறகு அவளை உயிர்ப்பித்துவிட்டு வேறொரு சவம் அவளுக்குப் பதிலாக வைக்கப்பட்டதும், இப்போதவள் உயிரோடிருக்கிறாள் என்பதும் எனக்கு நன்றாய்த் தெரியும்.

லாயர்:—பத்துப் பனிரண்டு பெயரைச் சிறைச்சாலைக்கனுப்பிவிடக்கூடிய அவ்வளவு சங்கதிகள் உன்னிடமிருக்கின்றனபோல் தெரிகின்றனவே.

மா-அ:—"அதுமட்டுமல்ல. சிலரைத் தூக்கிற்கனுப்பக்கூடியவையுமிருக்கின்றன" என்றான். (தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

## பையன் வயிற்றில் பாம்பு.

வட இந்தியாவில் ஏழு வயதுள்ள நூறுல்லா உஸனேன் நெடுநாளாகச் சுகவீனமாயிருந்தான். பாலோ சோறோ எதை உட்கொண்டாலும் அவனுக்குத் தெரியாமல் வாந்தி எடுத்துவந்தான். அவனுடைய வயிறு பளபளப்பாகக் கண்ணாடிபோலிருந்தது. எவ்வளவோ வைத்தியம் செய்தும் பயனில்லை. கடைசியாக வைத்தியர் அவனுக்குச் சில மாத்திரைகளைக் கொடுத்தார். பையன் உடனே வாந்தி யெடுக்க ஒரு பாம்பு வெளியே வந்தது. பாம்பின் தலை பையன் தொண்டையில் மாட்டிக்கொள்ள, பையனே அதைப்பிடித்து வெளியே யிழுத்தெறிந்துவிட்டான். பாம்பு ஒரு நாழிகை உயிரோடிருந்து இறந்துபோய்விட்டது. பாம்பு ஒருமுழ நீளமும் சிவப்பு நிறமும் நீலப் புள்ளிகளுமுடையதாயிருந்தது. பாம்பு வெளிவந்த பிறகு பையன் சுகமாயிருக்கிறான். பாம்பு சிறிய புழுவைப்போலிருக்கையில் தண்ணீருடன் சேர்ந்து பையன் வயிற்றுக்குள் போயிருக்க வேண்டுமென்று சொல்லுகிறார்கள்.

* * * * * *

**நூதன மனிதர்கள்:**—தென் சீனாவின் வனாந்தரங்களிலே ஒரு வகை நூதனமான மனிதர்கள் வசிக்கிறார்களாம். அவர்கள் முகம் நாயின் முகத்தைப்போல் இருக்கின்றது. உடல் முழுவதும் கட்டையான ரோமங்களுண்டு. மரங்களில் அவர்கள் வசிக்கிறார்கள். மிருக சுபாவமுடையோராயிருக்கிறார்கள் என்று அறிந்தோர் சொல்கின்றனர்.

* * * * *

ஜினோவாவை அடுத்த சலீப் மலையில் நட்சத்திர ஆராய்ச்சி சாலை ஒன்று கட்டப்போகிறார்கள். பூலோகத்திலேயே பெரிதான தூரதிருஷ்டிக்கண்ணாடி 100 அங்குல சுற்றளவுள்ளது அங்கே வைக்கப்படும். அது நாலு வருஷத்தில் கட்டி முடிக்கப்படும். இந்த நட்சத்திர ஆராய்ச்சி சாலைக்கு 4 லட்சம் பவுன் பிடிக்குமாம்.

* * * * *

கொழும்பு வாழைத்தோட்டம் அக்பர்லேனில் ஒரு முஸ்லீம் சகோதரர் சில தினங்கட்கு முன் கொஞ்சம் முத்துச் சிப்பி வாங்கி வெட்டிப் பார்த்ததில், 300 ரூபாய் மதிப்புள்ள முத்து ஒன்று கிடைத்ததாம். புத்தி நுட்பம் சகோதரருக்கு அதிகப்படவே அவர், அது கோழியின் வயிற்றில் ஒருநாள் இருந்துவெளிவருமேயாயின் கொஞ்சம் மதிப்பு அதிகப்படுமென்று எண்ணி அதனைத் தனது கோழிக்குக் கொடுத்தார்; கோழி சாப்பிட்டுவிட்டது. அவர் மறுநாள் கோழியை அறுத்துப் பார்த்தார்; முத்து நீறிப்போயிருந்ததாம். சகோதரரும் விழித்துக்கொண்டிருநதாராம்.

* * * * * *

**நெருப்புக் கோழிப் பெண்:**—இங்கிலாந்தில் 15 வயதுள்ள ஓர் பெண் வயிற்று வலியால் ஆஸ்பத்திரிக்குப் போனாள். டாக்டர் சோதனை செய்து பார்க்கும்போது 1200 சிறு சாமான்கள் அவள் வயிற்றில் இருந்தன; அவள் அவற்றை வேலைசெய்யும் இடங்களிற் றிருடி விழுங்கிவிடுகிறது வழக்கமாம். அவள் திருடி விழுங்கிய சிறு பொத்தான், கல், பணம், சேப்டிபின், சங்கிலி வெள்ளிச் சாவிகள் முதலிய பல பொருள்களின் நிறை மூன்று இராத்தலாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## குரோதன ௵ ஆனி ௴—கலியுகாதி 5027 சாலிவாகனம் 1848,
## பசலி 1334—கொல்லமாண்டு 1100-1101—ஹிஜரி 1343,
## இங்கிலீஷ் 1925 ௵ ஜூன் ௴—ஜூலை ௴

| ஆனி ௳ | ஜூன் ௳ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | ஞா | அஷ்0-3 நவ 58-30 | உத்49-48 | அமி60 | மிதுனரவி நா-16-43ஷட சீதிபுண்யகாலம், கரிநாள் |
| 2 | 15 | திங் | தச58-28 | ரேவ50-45 | சித்60 | மாடுவாங்க, கிரகப்ரவேசம் |
| 3 | 16 | செ | ஏ59-33 | அசு53-25 | சித்60 | ஸ்மார்த்த ஏகாதசி |
| 4 | 17 | புத | துவா60 | பரணி57-23 | சி57-23அ | வைஷ்ணவ, மத்வஏகாதசி |
| 5 | 18 | வியா | துவா1-53 | கிரு✕60 | மர60 | பிரதோஷம், கிருத்திகை |
| 6 | 19 | வெ | திர5-20 | கிரு2-20 | சி2-20மர | கரிநாள், மாசசிவராத்திரி |
| 7 | 20 | சனி | ச●9-48 | ரோ8-13 | அ8-13சித் | சர்வத்திர அமாவாசை |
| 8 | 21 | ஞா | அமா15-0 | மிரு15-3 | சித்60 | |
| 9 | 22 | திங் | பிர20-55 | திரு22-28 | சி22-28அ | |
| 10 | 23 | செவ் | துதி27-18 | புன30-10 | சித்60 | |
| 11 | 24 | புத | திரி33-50 | பூசம்38-10 | சித்60 | |
| 12 | 25 | வியா | சது40-3 | ஆயி45-45 | சி45-45அ | |
| 13 | 26 | வெ | பஞ்45-33 | மகம்52-43 | ம52-43சி | |
| 14 | 27 | சனி | சஷ்49-53 | பூரம்58-25 | சி58-25ம | |
| 15 | 28 | ஞா | சப்52-38 | உத்60 | அமி60 | |
| 16 | 29 | திங் | அ53-28 | உத்2-30 | சித்60 | |
| 17 | 30 | செவ் | நவ52-20 | அஸ்4-50 | சித்60 | |
| 18 | 1 | புத | தச49-8 | சித்5-3 | சித்60 | லக்ஷ்மி விரதாரம்பம் |
| 19 | 2 | வியா | ஏ44-10 | சுவா3-23 விசா59-50 | அ3-23சித் | சர்வ, மத்வ ஏகாதசி, சயன ஏகாதசி, அவமாகம் |
| 20 | 3 | வெ | து37-35 | அனு54-48 | சி54-48ம | கோபத்ம விரதாரம்பம் |
| 21 | ஜூலை ௴ 4 | சனி | திர29-40 | கேட்48-30 | சித்60 | மாடுகொள்ள |
| 22 | 5 | ஞா | ச○20-40 | மூல42-33 | அ42-33சி | பௌர்ணமி, ஹரிசயனம் |
| 23 | 6 | திங் | பவு11-20 | பூரா34-5 | மர60 | போதாயன சூத்திர சர்வ உபாகர்மம் |
| 24 | 7 | செவ் | பிர1-58 துதி52-50 | உத்26-48 | அ26-48சி | ஆஷாடபகுளம். சாதுர் மாஸ்யதுதியா, அவமாகம் |
| 25 | 8 | புத | திரி44-23 | திரு20-3 | சி20-3பிர | அவமாகம் |
| 26 | 9 | வியா | சது36-55 | அவி14-13 | சி14-13ம | வியாதியஸ்தர் குளிக்க |
| 27 | 10 | வெ | பஞ்30-50 | சதை9-35 | சித்60 | விவாகம், சர்வமுகூர்த்தம் |
| 28 | 11 | சனி | சஷ்26 25 | பூரட்6-25 | மர6-25சி | ஏற்றம் ஸ்தாபிக்க |
| 29 | 12 | ஞா | சப்23-40 | உத்5-0 | அமி60 | காதுகுத்த, வித்யாரம்பம் |
| 30 | 13 | திங் | அ22-48 | ரேவ5-25 | சித்60 | பிரயாணம் விலக்க |
| 31 | 14 | செவ் | நவ23-38 | அஸ்7-28 | சித60 | |
| 32 | 15 | புத | தச26-0 | பர✕11-13 | சி11-13அ | கிருத்திகை |

| | | | |
|---|---|---|---|
| | | புத | சூரி சுக் |
| | 1-கட-செவ் 4-மிது-புத 14-கட-சுக் 18-கடக-புத | | செ ராகு |
| கே | | | |
| குரு | | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.